Munawar
66345262

வெளியீட்டெண் : 9

# முஸ்லிமின் அடிப்படைக் கடமை

மௌலானா
சையித் அபுல் அஃலா மௌதூதி (ரஹ்)

தமிழாக்கம் :
"மஹதி"

வெளியீடு :

இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்,
138, பெரம்பூர் நெடுஞ்சாலை,சென்னை - 600 012,
போன் : 2662 4401, 2662 0091. Fax : 2662 0682.
E-mail: iftchennai12@email.com Web : www.iftchennai.org

SHAHADAT-E-HAQ (Tamil)
MUSLIMIN ADIPPADAI KADAMAI

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| First Edition | : | Oct | 1969 | | | | | |
| Reprints | : | Sep | 1972 | Aug | 1977 | Nov | 1979 |
| | : | Jan | 1983 | June | 1987 | Sep | 1994 |
| | : | Dec | 1996 | Mar | 2001 | Jan | 2004 |
| | : | Sep | 2004 | Mar | 2006 | Mar | 2009 |
| | : | Apr | 2011 | | | | |
| 15th Reprint | : | Mar | 2013 | | | | |

**ISBN** : **978 81 232 0011 8**

**Price** : **₹ 15.00**

**Author** : **Moulana Syed Abul A'la Moududi (Rah)**

**Translator** : **Mahadhi**

**Publisher** : **ISLAMIC FOUNDATION TRUST**
138, Perambur High Road
Chennai - 600 012. India
Ph.: +91 44 2662 44 01, 4332 6446
Fax: 2662 0682
E-mail: iftchennai12@gmail.com
Website: www.ift-chennai.org

Printed at Patel Graphics, Chennai

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# பதிப்புரை

“முஸ்லிமின் அடிப்படைக் கடமை” எனும் சிந்தனை யைக் கிளறும் - இறைநம்பிக்கைக்கு உரமூட்டும் நன்னூலைத் தமிழ் கூறு நல்லுலகிற்குச் சமர்ப்பிக்கும் அரிய வாய்ப்பை அருளிய வல்ல இறைவனுக்கே எல்லாப் புகழும்!

நவீன உலகின் இஸ்லாமியச் சிந்தனையாளர் மௌலானா சையித் அபுல் அஃலா மௌதூதி அவர்கள் 1946-ஆம் ஆண்டு டிசம்பர் 30-ஆம் நாள் லாஹூர் மாவட்டத்தைச் சார்ந்த முராத்பூர் நகரில் ஆற்றிய உரைதான் இந்நூல். இது மௌலானா அவர்களின் ஒரு சிறந்த முக்கியத்துவமிக்கப் பேருரையாகும்.

இதில் இஸ்லாமியச் சமுதாயத்தின் பிரச்னைகள், பொறுப்பு கள், கடமைகள் ஆகிய அனைத்தும் தெள்ளத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. மேலும் இன்று முஸ்லிம்கள் பல் வேறுபட்ட ஆபத்துகள், துன்பங்கள் ஆகியவற்றால் சூழப் பட்டிருப்பதற்கான ஒரே காரணம், அவர்கள் தங்களின் அடிப்படைக் கடமைகளை நிறைவேற்றுவதில் அலட்சியம் காண்பித்ததுதான் என்றும், தங்களின் இந்த நிலையை மாற்றிக் கொள்ளாத வரையில் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் இந்த இழிநிலை ஒருபோதும் மாறாது என்றும் மனத்தில் பதியும்படி மௌலானா அவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள். இக்கணமே அக்கடமைகளை நிறைவேற்றத் தொடங்கி விட்டால் அவர் களைப் பிடித்து ஆட்டுகின்ற இந்தத் துயரங்கள் நொடிப்

பொழுதில் நீங்கி, இவ்வுலகிலே அவர்கள் தலைசிறந்தவர் களாகவும், மறுவுலகில் வெற்றியாளர்களாகவும் திகழ்வார்கள் என் பதை ஆதாரப்பூர்வமாக எடுத்துரைக்கிறார்கள் மௌலானா அவர்கள்.

வாசகர்கள் இந்நூலை கவனத்துடன் படித்து, அதை செயல்படுத்துவார்கள் என உறுதியோடு நம்புகிறோம்.

**M.A. ஜமீல் அஹ்மத்.**

பொதுச்செயலாளர்,

இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட்

சென்னை - 12

26.11.1986

# முஸ்லிமின் அடிப்படைக் கடமை

மனிதனைப் படைத்து, அவனுக்குக் கல்வியறிவின் சக்திகளை வழங்கி, பூமியில் அவனுக்குத் தன் பிரதிநிதித் துவப் பெருமையளித்து, அவனுக்கு வழிகாட்டுவதற்காகத் தூதர்களை அனுப்பி, வேதங்களை அருளி, நிறை ஞானத் துடனும் அளவிலா அருளுடனும் ஆட்சிபுரியும் அண்டங் களின் ஒரே படைப்பாளனும், அதிபதியும், அதிகாரியுமான இறைவனுக்கே எல்லாப் புகழும்!

மேலும் மனிதனுக்கு மனிதத்துவம் கற்பிக்கவும், அவ னுடைய வாழ்வின் குறிக்கோளை உணர்த்தவும், அவன் உல கில் வாழ்வதற்குச் சரியான வழிகாட்டவும் வந்த வாய்மையும் தூய்மையும் உடைய அடியார்கள் மீது இறைவனுடைய அளப்பரிய அருள் உண்டாகட்டும்! இன்று உலகில் அற வுரையின் ஒளியும், ஒழுக்கத்தின் தூய்மையும், நேர்மையும் காணப்படுகின்றன என்றால் அது அவ்வடியார்களின் வழிகாட்டுதலின் காரணமாகவேயாகும். மனிதன் என் றென்றும் அவர்களுக்கு நன்றிக்கடன் பட்டவனாகவே இருக் கிறான்.

அன்பர்களே! நண்பர்களே! நாம் நம் கூட்டங்களை இருவகையாகப் பிரிக்கிறோம். நாம் நமது வேலைத் திட் டங்களைப் பரிசீலனைச் செய்து, அவற்றைச் செயல்படுத்து

வது குறித்து நமக்குள் ஆலோசனை செய்யும் நோக்கத்துடன் கூடுவது ஒரு வகையாகும். மற்றொரு வகை குறிப்பாக எந்த இடத்தில் நமது கூட்டம் கூட்டப்படுகிறதோ அங்குள்ள பொது மக்களுக்கு நமது அழைப்பை விடுக்கும் நோக்கத்துடன் கூடுவதாகும். நமது அழைப்பு என்ன, எதன்பால் நாம் அழைக்கிறோம் என்பதைத் தெரிவிப்பதற்காகவே இங்கு இவ்வாறு தங்களுக்குச் சிரமம் அளித்துள்ளோம்.

நமது அழைப்பின் ஒரு பகுதி ஏற்கனவே முஸ்லிம்களாக உள்ள மக்களுக்கு உரியதாகும். மறுபகுதி முஸ்லிம்கள் அல்லாது மக்களுக்கு உரியதாகும். அவர்கள் ஒவ்வொருவருக்கும் நம்மிடம் ஒரு செய்தி இருக்கிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக இரண்டாவது வகை மக்கள் இங்கு எனக்குத் தென்படவில்லை. நமது முற்காலத் தவறுகளின் காரணமாகவும், இன்றைய நமது பொறுப்பற்ற போக்கினாலும் மக்களின் ஒரு பெரும் பகுதியினர் நம்மைவிட்டு விலகிப் போய் விட்டனர். அவர்களை நம்மிடம் அழைத்தோ, நாம் அவர் களிடம் சென்றோ நம்முடையவும், அவர்களுடையவும் இறைவன், நம் அனைவருடைய வழிகாட்டுதலுக்காகவும் தன் தூதர்களின் மூலம் அனுப்பிய செய்தியை அறிவிப்பதற்கான வாய்ப்பு நமக்கு மிகவும் அரிதாகவே கிடைக்கிறது. இப்போது அவர்கள் இங்கில்லாத காரணத்தால் முஸ்லிம்களுக்கென்று குறிப்பாக உள்ள அழைப்பின் பகுதியை மட்டும் நான் சமர்ப்பிக்கிறேன்.

முஸ்லிம் என்னும் அந்தஸ்தில் அவர்கள் மீதுள்ள பொறுப்புகளை அவர்கள் உணர்ந்து, அவற்றை நிறைவேற்ற வேண்டும் என்பதற்காகவே முஸ்லிம்களை நாம் அழைக்கிறோம். “நாங்கள் முஸ்லிம்கள் - நாங்கள் இறைவனையும் அவனுடைய மார்க்கத்தையும் ஏற்றுக் கொண்டுள்ளோம்”

என்று மட்டும் கூறித் தப்பித்துக் கொள்ள முடியாது. நீங்கள் இறைவனை உங்கள் இறைவனாகவும், இறைவனுடைய மார்க்கத்தை உங்கள் மார்க்கமாகவும் ஏற்றுக் கொண்டால் அத்துடன் உங்கள் மீது சில பொறுப்புகளும் ஏற்படுகின்றன. அவற்றைப் பற்றிய உணர்வு உங்களுக்கு ஏற்பட வேண்டும். அவற்றை நீங்கள் நிறைவேற்றாவிட்டால் அவற்றின் கடும் விளைவுகளிலிருந்து இம்மையிலோ, மறுமையிலோ தப்பிக்க முடியாது.

அப்பொறுப்புகள் என்ன? அவை இறைவன் மீதும், அவனுடைய (வானவர்கள்) மலக்குகள், வேதங்கள், தூதர்கள் மீதும், கியாம (இறுதித் தீர்ப்பு) நாளின் மீதும் நம்பிக்கை (ஈமான்) கொள்வது மட்டுமல்ல; அப்பொறுப்பு நீங்கள் தொழுகையை நிறைவேற்றவது, நோன்பு நோற்பது, ஹஜ் செய்வது, ஜகாத் கொடுப்பது மட்டுமல்ல; அப்பொறுப்பு நீங்கள் திருமணம், மணவிலக்கு, வாரிசு உரிமைகள் தொடர்பாக இஸ்லாம் வகுத்துள்ள நியதிகளின்படிச் செயல்படுவது மட்டுமல்ல; இவை யாவற்றையும் விட உங்கள் மீது ஒரு பெரிய பொறுப்பு உள்ளது. அது நீங்கள் நம்பிக்கை கொண்ட கொள்கைகளின் மெய்ம்மையை உலகிற்கு நிரூபித்துக் காட்ட வேண்டும். உங்களுடைய ஒவ்வொரு சொல்லும், செயலும் நீங்கள் நம்பிக்கை கொண்டவை உண்மை என்பதை நிரூபிக்க வேண்டும். இந்த மகத்தான பொறுப்பை நீங்கள் சுமந்திருக்கிறீர்கள். குர்ஆனில் விளக்கப்பட்டுள்ளபடி முஸ்லிம் எனும் பெயரால் உங்களை ஒரு நடுநிலையான சமுதாயமாக்கியதன் ஒரே நோக்கம் – நீங்கள் எல்லா மக்களுக்கும் 'இவை மெய்யான கொள்கைகள்' என்பதற்குச் சான்று அளிப்பவராய் விளங்கிட வேண்டும்; அப்பொறுப்பை நிறைவேற்றுவதற்காக உங்களின் சக்தி, சாதனங்கள் அனைத்தையும் முழு மையாகப் பயன்படுத்திட வேண்டும் என்பதேயாகும்.

وَكَذَٰلِكَ جَعَلْنَٰكُمْ أُمَّةً وَسَطًا لِّتَكُونُوا۟ شُهَدَآءَ عَلَى ٱلنَّاسِ وَيَكُونَ ٱلرَّسُولُ عَلَيْكُمْ شَهِيدًا

*"மேலும் இவ்வாறே (முஸ்லிம்களான) உங்களை நாம் உம் மத்தன் வஸத்தன்* - சமநிலையுடைய சமுதாயமாக ஆக்கி னோம் - நீங்கள் மக்களுக்குச் சான்று வழங்குபவர்களாயும், இறைத்தூதர் உங்களுக்குச் சான்று வழங்குபவராகவும் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக!"*

*(திருக்குர்ஆன் 2 : 143)*

உங்கள் சமூகம் படைக்கப்பட்டதின் நோக்கமே இது தான்! இதை நீங்கள் நிறைவேற்றாவிட்டால், நீங்கள் உங்கள் வாழ்வையே வீணாக்கி விட்டவர்கள் ஆவீர்கள். இது இறை வனால் உங்கள் மீது விதிக்கப்பட்ட கடமையாகும். இறை வனின் கட்டளை இதுதான் :

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ كُونُوا۟ قَوَّٰمِينَ لِلَّهِ شُهَدَآءَ بِٱلْقِسْطِ

*"இறைநம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்காக வாய்மையில் நிலைத்திருப்போராகவும் நீதிக்குச் சான்று வழங்குவோராகவும் திகழுங்கள்"*

*(திருக்குர்ஆன் 5 : 8)*

இது சாமானியக் கட்டளையல்ல. கண்டிப்பான கட்டளை. இதனால்தான் இறைவன் கூறுகின்றான் :

---

* உம்மத்தன் வஸத்தன் என்றால் உலக சமுதாயங்களிலேயே நிலை குலையாத, நீதியிலும் நேர்மையிலும் வழி தவறாத, உயர் தரமான, கண்ணியமான சமூகமாகும்.

وَمَنْ أَظْلَمُ مِمَّنْ كَتَمَ شَهَادَةً عِنْدَهُ مِنَ اللَّهِ

*"அல்லாஹ்விடமிருந்து வந்த ஒரு சான்றைத் தன்னிடம் வைத்துக் கொண்டு அதனை மறைப்பவனைவிடப் பெரிய அக்கிரமக்காரன் யார்?"* *(திருக்குர்ஆன் 2 : 140)*

இக்கடமையை நிறைவேற்றாவிட்டால் விளைவு என்ன ஆகும் என்பதையும் இறைவன் தெரிவித்து விட்டான். உங்களுக்கு முன் யூதர்கள் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டிருந்தார்கள்; அவர்கள் மெய்யை மறைத்தார்கள். மெய்ம்மைக்கு மாறாகச் சில சான்றுகளை வழங்கினார்கள். மொத்தத்தில் அவர்கள் மெய்ச்சான்று அளிப்பவர்களாய் இல்லாமல், பொய்ச் சான்று அளிப்பவர்களாயிருந்தார்கள். விளைவு என்னவாயிற்று? இறைவன் அவர்களை உதறித் தள்ளினான். அவர்கள் மீது பலமான அடி விழுந்தது!

وَضُرِبَتْ عَلَيْهِمُ الذِّلَّةُ وَالْمَسْكَنَةُ وَبَآءُوْ بِغَضَبٍ مِّنَ اللَّهِ

*"இழிவும் தாழ்வும் (வீழ்ச்சியும்) அவர்கள் மீது விதிக்கப்பட்டு விட்டன. மேலும் அவர்கள் அல்லாஹ்வின் சினத்திற்கும் ஆளாகிவிட்டார்கள்."* *(திருக்குர்ஆன் 2 : 61)*

சான்று வழங்க வேண்டிய பொறுப்பு உங்கள் மீது சுமத்தப்பட்டுள்ளதன் கருத்து இதுதான். எந்த வாய்மை உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளதோ, மனிதனின் நன்மை, ஈடேற்றம் முதலியவற்றுக்காக எந்த ஒரே வழி காட்டப்பட்டுள்ளதோ அந்த மெய்யையும் வாய்மையையும் உலகின் முன்

எடுத்துக்காட்டி, அதுவே நேர்வழி என்பதற்குச் சான்று வழங்க வேண்டும். அந்தச் சான்று எவ்வளவு தெளிவும், வலிவும் உள்ளதாக இருக்க வேண்டுமெனில், அக்கொள்கைகளே உண்மையானவை – நேர்மையானவை என்பதை நிலைநாட்டிட வேண்டும். உலக மக்கள் முன்னிலையில் இந்த (தீன்) மார்க்கக் கொள்கைகளின் வாதம் அனைத்தும் முழுமையாக்கப்பட வேண்டும். இத்தகைய சான்று வழங்குவதற்காகவே உலகில் இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டிருந்தார்கள். அதை நிறைவேற்ற வேண்டியது அவர்களின் கடமையாக இருந்தது. எல்லா இறைத்தூதர்களுக்கும் பின்பு அந்தச் சான்று வழங்குதல் அவர்களைப் பின்பற்றுவோரின் கடமையாக்கப்பட்டு வந்தது. பின்னர் இறுதித் தூதராகிய நபி முஹம்மது (ஸல்) அவர்களுடைய வாழ்வில் – இந்தச் சான்று வழங்குதல் அவர்கள் மீது தனிப்பட்ட முறையில் எவ்வாறு கடமையாக இருந்ததோ, அதைப் போலவே அவர்களுக்குப் பின் இப்போது முஸ்லிம் சமூகத்தின் மீதும் குழுரீதியில் – கூட்டாக நிறைவேற்ற வேண்டியது கடமையாகி விட்டது.

இறைவன் மக்கள் குலத்திற்கென்று விசாரணை, நற்கூலி, தண்டனையளித்தல் ஆகியன குறித்து எந்தச் சட்டங்களை ஏற்படுத்தியுள்ளானோ – அவற்றின் அடிப்படையும் இந்தச் சான்று வழங்குதல் மீதே அமைந்திருக்கிறது. இதிலிருந்து அதன் முக்கியத்துவத்தைச் சிந்தித்து உணர்ந்து கொள்ளலாம். இறைவன் பேரறிவாளன்; பேரன்புடையோன்; நீதியில் நிலைத்திருப்பவன். அத்தகைய இறைவனின் விருப்பம் என்னவென்பதை மக்கள் அறியாமல் இருந்து, அவன் விருப்பத்துக்கு மாறாக நடந்ததற்காகத் தண்டிப்பதோ – மக்கள் நேர்வழி என்னவென்பதைத் தெரியாமல் இருந்து, அவர்கள் வழி தவறி நடந்தார்கள் என்பதற்காக விசாரிப் பதோ – எவை பற்றி விசாரணை நடைபெறும் என்பதை அறியாமல் இருந்த மக்களைக் கேள்வி கேட்பதோ – தண்டனைக்குள்ளாக்கு

வதோ அவனுடைய பேரறிவுக்கும், பேரன்புக்கும், நீதிக்கும் அப்பாற்பட்டவையாகும். ஆதலால் தான் அல்லாஹ், மனிதப் படைப்பின் தொடக்கத்திலேயே, முதல் மனிதரையே ஓர் இறைத்தூதராகவும் ஆக்கினான். மேலும் எண்ணற்ற தூதர் களையும் அவன் அனுப்பி வைத்தான்.

உங்கள் விவகாரங்களில் உங்கள் படைப்பாளனின் விருப்பம் இன்னது, உலகில் நீங்கள் வாழ்வதற்குரிய நேர்மை யான வழி இன்னது, உங்கள் அதிபதியாகிய அல்லாஹ்வின் உவப்பை பெறுவதற்குக் கடைப்பிடிக்க வேண்டிய செயல் முறை இன்னது, நீங்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் இன் னவை, நீங்கள் தவிர்க்க வேண்டிய செயல்கள் இன்னவை, நீங்கள் விசாரிக்கப்படவிருக்கும் விவகாரங்கள் இன்னவை என்பனவற்றைக் குறித்து மக்கள் குலத்திற்கு எச்சரிக்கை செய்வதையும், தெளிவுபடுத்துவதையும், இவற்றின் சான்று வழங்குவதையுமே அத்தூதர்களின் மீது இறைவன் கட மையாக்கினான்.

இறைவன் தனது தூதர்களின் மூலம் இந்தச் சான்று வழங் குதலைத் தந்திருப்பதன் நோக்கம், "நாங்கள் எதனைப்பற்றி அறியாதவர்களாயும் - முன்கூட்டியே அறிவிக்கப்படாத வர்களாயும் - இருந்தோமோ அதைப்பற்றி எங்களை விசாரிக் கின்றாயே!" என்று மக்கள் அல்லாஹ்வைக் குறைகூற வழி யில்லாது போய்விட வேண்டுமென்பதேயாகும். இது குறித் துத் திருமறை மிகத் தெளிவாகத் தெரிவிக்கின்றது.

رُسُلًا مُّبَشِّرِينَ وَمُنذِرِينَ لِئَلَّا يَكُونَ لِلنَّاسِ عَلَى اللَّهِ
حُجَّةٌ بَعْدَ الرُّسُلِ ۚ وَكَانَ اللَّهُ عَزِيزًا حَكِيمًا

*"இறைத்தூதர்கள் அனைவரும் நற்செய்தி அறிவிப்பவர் களாகவும் எச்சரிப்பவர்களாகவும் அனுப்பி வைக்கப்பட்*

*டார்கள். ஏனெனில் அத்தூதர்கள் அனுப்பப்பட்ட பிறகு அல்லாஹ்விடம் முறையிட மக்களுக்கு ஆதாரம் ஏதும் இருக்கக் கூடாது என்பதற்காக! மேலும் எந்நிலையிலும் அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனாகவும் நுண்ணறி வளானாகவும் இருக்கின்றான்."* *(திருக்குர்ஆன் 4 : 165)*

இவ்வாறு மக்கள், தன் மீது குறை கூறாதிருக்கும் பொருட்டு நேர்வழி காட்டும் பொறுப்பை நிறைவேற்ற, தன்னு டைய வழிகாட்டுதலுடன் தன் தூதர்களை அனுப்பினான். மக்களுக்கு நேர்வழி காட்டும் பொறுப்பையும் அவர்கள் மீது சுமத்தினான். ஆகவே இறைத்தூதர்கள் நேர்வழி காட்டு தலையும், அதைப்பற்றி சான்று வழங்குதலையும் சரிவர நிறை வேற்றிவிட்டால் மக்கள் தங்கள் செயல்களுக்குத் தாங்களே பொறுப்பாளிகள் ஆகிவிடுவார்கள். இறைத்தூதர்கள் இத்த கைய நேர்வழி காட்டுதலையும், சான்று வழங்குதலையும் சரி வர நிறைவேற்றாவிட்டால், மக்களின் வழிதவறிய செயல் களுக்கு அத்தூதர்களே விசாரணைக்குரியவர்கள் ஆகிவிடு வார்கள். இத்தகைய முக்கியமான கடமை அவர்கள் மீது சுமத் தப்பட்டது. வேறு வார்த்தைகளில் சொன்னால், இறைத்தூதர் பதவியின் சங்கடமான நிலை யாதெனில், தங்களுக்கு நேர் வழி காட்டப்படவில்லை என்று மக்கள் வாதம் செய்ய இய லாத நிலையில் அவர்கள் வைக்கப்பட வேண்டும். இல்லை யானால் "இறைவன் (தன் தூதர்களுக்கு) அருளிய மெய் யறிவை எங்களுக்கு அறிவிக்கவில்லை. இறைவன் காட்டிய நேர்வழியை எங்களுக்குக் காட்டவில்லை" என்று மக்கள் கூறும் குற்றச்சாட்டு இறைத்தூதர்களின் மீது சார்ந்து விடும். இக்காரணத்தாலேயே நபிமார்கள், தங்கள் மீதுள்ள இப் பொறுப்பின் பாரத்தை மிகவும் கடுமையாய் உணர்ந்து, அவர் கள் அதன் அடிப்படையில் தாமே மெய்ச்சான்று வழங்கு வதிலும், அதை மக்களிடையே வலியுறுத்துவதிலும் பெரு முயற்சிகள் எடுத்துக் கொண்டார்கள்.

அதன் பிறகு எவர்கள் – இறைத்தூதர்களின் மூலம் மெய் யறிவையும், நேர்வழியையும் பெற்றார்களோ அவர்கள் ஒரே உம்மத் – சமுதாயமாக்கப்பட்டனர். இறைத்தூதர்கள் மீது சுமத் தப்பட்ட நேர்வழி காட்டுதல், சான்று வழங்குதல் ஆகிய பணி களின் மகத்தான பொறுப்பு பிறகு அச்சமுதாயத்தின் மீது சார்ந்ததாயிற்று. இறைத்தூதர்களின் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்கள் என்னும் அந்தஸ்தில் அச்சமுதாயத்தினரின் நிலை இவ்வாறு தீர்மானமாகி விடுகிறது; அச்சமுதாயத்தின் சத்தியச் சான்று வழங்கும் பொறுப்பை சரிவர நிறைவேற்றி விட்ட பின்பும் மக்கள் திருந்தவில்லையானால் (நேர்வழி நடக்காத) அக்குற்றத்திற்காக அந்த மக்கள் பிடிக்கப்படுவார் கள்; சான்று பகர்ந்த அச்சமுதாயத்தினர் நற்கூலி பெறுவார் கள். ஆனால் அச்சமுதாயத்தினர் மெய்ச்சான்று வழங்கு தலில் குறை செய்தால் அல்லது சத்தியத்திற்குப் புறம்பாக அசத்தியத்திற்குச் சான்று வழங்குவோராய் இருந்தால் இதர மக்கள் பிடிக்கப்படுமுன்னே அச்சமுதாயமே பிடிக்கப்படும்! அச்சமுதாயம் தன் நடத்தைக்காக விசாரிக்கப்படுவதன்றி; அது மெய்ச்சான்று வழங்கி நல்ல முன் மாதிரியாக விளங் காததால் அல்லது பொய்ச்சான்று அளித்துத் தவறான முன் மாதிரியாக இருந்ததால், இதர மக்கள் அறியாமையிலும் குழப் பம் விளைவிப்பதிலும் தவறான செயலிலும் மூழ்கிவிட்ட காரணத்திற்காகவும் இந்தச் சமுதாயமே விசாரிக்கப்படும்.

பெரியோர்களே! என்மீதும், உங்கள் மீதும், தங்களை முஸ் லிம்கள் என்று பறைசாற்றிக் கொள்வோர் அனைவரின் மீதும், மேலும் எவர்களுக்கு இறைவனின் வேதமும், இறைத்தூதர் களின் நேர்வழியும் கிடைத்திருக்கிறதோ அவர்கள் மீதும் சுமத்தப்பட்ட மெய்ச்சான்று வழங்குதலின் நுட்பமான பொறுப்பு இதுவேயாகும்.

இந்தச் சான்று வழங்குதலின் முறை என்னவென்பதை இப்போது சிந்தியுங்கள்! சான்று வழங்குதல் இருவகைப்படும்.

ஒன்று சொல் மூலம் சான்று பகர்தல், மற்றொன்று செயல் மூலம் சான்று வழங்குதல். சொல் மூலம் சான்று பகர்தலின் வழிமுறை என்னவெனில், நாம் பேச்சு மூலமும் எழுத்து மூலமும் இறைத்தூதர்கள் வாயிலாக நமக்குக் கிடைத்துள்ள உண்மையை உலகுக்குத் தெளிவாக்குவதாகும். உலக மக்களுக்கு விளங்கும்படிச் சொல்லவும், நெஞ்சில் இடம் பெறச் செய்யவும் சாத்தியமான எத்தனை முறைகள் உள்ளனவோ, அவை அனைத்தையும் பயன்படுத்தி அழைப்பு, பிரச்சாரம், விளக்கம் ஆகியவற்றுக்குச் சாத்தியமான எத்தனை சாதனங்கள் உள்ளனவோ அவை அனைத்தையும் பயன்படுத்தியும் – கல்வியும் கலைகளும் எத்தனை சாதனங்களைச் சேகரித்து தந்துள்ளனவோ அவை அனைத்தையும் கையாண்டும் அல்லாஹ் மனிதனுக்காக உருவாக்கிய இந்த மார்க்கத்தை (தீனை) நாம் உலகுக்கு அறிமுகப்படுத்த வேண்டும்.

சிந்தனை, சமய உணர்வு, ஒழுக்கம், பண்பாடு, நாகரிகம், கூட்டுறவு, தொழில், கொடுக்கல் வாங்கல், சட்டம், நீதி, அரசியல், அரசமைப்பு, மனிதர்களுக்கு இடையில் உறவு ஆகிய எல்லாத் துறைகளிலும் இந்த மார்க்கம் – மனிதனின் வழிகாட்டுதலுக்காகச் சமர்ப்பித்துள்ள யாவற்றையும் நாம் ஒளிவு மறைவின்றி தெள்ளத் தெளிவாய் விளக்க வேண்டும். அவை யாவும் உண்மை என்பதை அத்தாட்சிகளாலும், சான்றுகளாலும் நிருபித்து விட வேண்டும். அவற்றுக்கு மாற்றமான எல்லாவற்றையும் விரிவாக விமர்சித்து, அவற்றில் என்ன தீமை இருக்கிறது என்பதை எடுத்துக்காட்ட வேண்டும். இறைத்தூதர்கள் தனிப்பட்ட முறையில் இதற்காக எந்த அளவு அக்கறையுடையவர்களாய் இருந்தார்களோ அந்த அளவு நாமும் சமுதாய ரீதியில் – கூட்டு முறையில் அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு எடுத்துக் கொள்ளாத வரை சொல்லால் சான்று பகரும் இந்தப் பொறுப்பு நிறைவேறியதாகாது.

இந்தப் பொறுப்பை நிறைவேற்றுதலையே மையமாக அமைத்து. அதனைச் சுற்றியே நமது கூட்டு முயற்சிகள் அனைத்தும் சுழல வேண்டும். நாம் நம்முடைய பணம், மூளை மற்றும் நம்மிடமுள்ள இதர ஆற்றல்கள் அனைத்தையும் இதில் ஈடுபடுத்த வேண்டும். இதுவே நம்முடைய எல்லா வேலைகளிலும் முக்கியமான நோக்கமாக இருக்க வேண்டும். மேலும் உண்மைக்கு மாறாகச் சான்று பகரும் எத்தகைய குரலும் நம்மவரிடத்திலிருந்து எழுவதை நாம் ஒருபோதும் சகித்துக் கொள்ளக் கூடாது.

இனிச் செயல் மூலம் சான்று வழங்குதலைப் பற்றிக் கவனிப்போம். அதன் பொருள் இதுதான் : நாம் மெய்யென்று மதிக்கும் மாண்புகளை நடைமுறை வாழ்வில் பிரதிபலித்துக் காட்டுவதாகும். உலகம் நமது வாக்கின் வாயிலாக அவற்றின் வாய்மையைப் பற்றிக் கேள்விப்பட்டால் மட்டும் போதாது. உலகம் தனது கண்களாலேயே நமது சொந்த வாழ்வின் மூலம் அவற்றின் மேன்மைகளையும், செழிப்புகளையும் கண்டு கொள்ள வேண்டும். நம்பிக்கையின் (ஈமானின்) பலனாய் மனிதனின் ஒழுக்கத்திலும், இதர விவகாரங்களிலும் காணப்படும் இனிமையை நம்முடைய உறவுகளிலும் தொடர்புகளிலும் உலகம் சுவைக்க வேண்டும்.

இந்த மார்க்கத்தின் வழிகாட்டுதலினால் எத்தகைய சிறந்த மனிதர்கள் உருவாகிறார்கள்; எத்தகைய நீதிமிக்க சமுதாயம் அமைகிறது; எத்தகைய புனிதமான – களங்கமற்ற நாகரிகம் பிறக்கிறது; எத்தகைய தூய்மையான அடிப்படைகளில் கல்வியும் இலக்கியங்களும் கலைகளும் வளருகின்றன; எத்தகைய நீதிமிக்க – அன்புகெழுகிய – மோதல்கள் அற்ற பரஸ்பர ஒத்துழைப்பு பொருளாதாரத் துறையில் தோன்றுகிறது; எவ்வாறு தனிப்பட்ட வாழ்விலும், கூட்டு வாழ்விலும் உள்ள ஒவ்வோர் அம்சமும் திருந்துவதுடன் அழகும் பெறுகிறது; நன்மை

களால் நிரம்பி விடுகிறது என்பதை அவர்கள் தாமாகவே நம் வாழ்வில் கண்டுகொள்ள வேண்டும்.

நாம் ஒவ்வொருவரும், தனிப்பட்ட முறையிலும் சமுதாய முறையிலும் நம் மார்க்கத்தின் உண்மைகளை எடுத்துக்காட்டும் அத்தாட்சிகளாய் மாறிட வேண்டும். நம்மில் ஒவ்வொருவருடைய குணமும் நடத்தையும் அது மெய் என்பதை நிரூபிக்க வேண்டும். நமது இல்லம் அதன் நறுமணத்தால் கமகமக்க வேண்டும். நமது கடைகளும் தொழிலகங்களும் அதன் ஒளியால் மிளிர வேண்டும். நமது அலுவலகங்களும் கல்விக்கூடங்களும் அதன் பிரகாசத்தால் ஜொலிக்க வேண்டும். நமது இலக்கியமும் இதழ்களும் வெளியீடுகளும் அதன் நன்மைகளுக்கு நற்சான்று அளிக்க வேண்டும். சமுதாயக் கொள்கைகளும், கூட்டு முயற்சியும் அது உண்மை என்பதற்கு ஒளிமிக்கச் சான்றுகளாய் விளங்க வேண்டும். சுருங்கக் கூறின், நாம் எங்கு, எந்த தகுதியில் எந்த மனிதன் அல்லது சமூகத்துடன் உறவாட நேர்ந்தாலும் அவர்கள் நம் தனிப்பட்டவரிடமும், சமுதாயத்திடமும் காணப்படும் குண மேம்பாட்டினால் நாம் எவற்றையெல்லாம் மெய் என்று கூறுகிறோமோ அவை யாவும் மெய்யே என்பதையும், அதனால் உண்மையில் மனித வாழ்வு தூய்மையானதாகவும் மேம்பட்டதாகவும் சீர்திருந்தியதாகவும் ஆகிவிடுகிறது என்பதையும் கண்கூடாகக் கண்டுகொள்ள வேண்டும்.

இத்துடன் மேலும் ஒன்றைத் தெளிவுபடுத்திட விரும்புகிறேன். அந்தச் சான்று வழங்குதல் முழுமையடைய வேண்டுமானால் மேற்கூறப்பட்ட அடிப்படையில் ஓர் அரசு அமைய வேண்டும். அந்த அரசு இஸ்லாமியச் சட்ட திட்டங்களின் அடிப்படையில் அமைய வேண்டும். அது முழுக்க முழுக்க இந்த தீனை – மார்க்கத்தை நடைமுறைக்குக் கொண்டு வர வேண்டும். தீனின் அடிப்படையில் நீதிமிக்கதாக, நேர்மை மிக்கதாக அந்த அரசு இருக்க வேண்டும்; சீர்திருத்தத்

திட்டங்கள் உடையதாக இருக்க வேண்டும். குடிமக்களின் நலன் காப்பதாக இருக்க வேண்டும். தூய்மையான உள்நாட்டு அரசியலும், நேர்மையான வெளிநாட்டுக் கொள்கையும் உடையதாக இருக்க வேண்டும். கண்ணியமான போர்ச்சட்டங்களும், நடைமுறைகளும் உடையதாக இருக்க வேண்டும். நம்பிக்கைக்குரிய, உறுதியான சமாதான ஒப்பந்தங்கள் உடையதாக இருக்க வேண்டும். இவ்வாறாக எந்த தீன் இந்த அரசைத் தோற்றுவித்துள்ளதோ அது உண்மையில் மனித குல நன்மைக்கு உறுதி அளிக்கிறது. அதைப் பின்பற்றுவதில் தான் மக்கள் குலத்தின் நன்மை இருக்கிறது என்பதை முழு உலகிற்கும் நிருபித்து விட வேண்டும். அப்போதுதான் இந்தச் செயல்முறைச் சான்று வழங்குதல் முழுமையடையும். இந்தச் செயல்முறைச் சான்று வழங்குதல் - வாக்கால் அளிக்கும் சான்று பகர்தலுடன் இணைந்து விட்டால், முஸ்லிம் சமுதாயத்தினர் மீது சுமத்தப்பட்ட பொறுப்பு முழுமையாக நிறைவேறி விடுகிறது. அப்போது தங்களுக்கு நேர்வழி தெளிவுபடுத்தப் படவில்லை என்று வாதம் புரியாத நிலைக்கு மக்கள் குலத்தைக் கொண்டு வந்து விடுகிறோம். அப்போது தான் 'நபி (ஸல்) அவர்கள் நமக்குச் சமர்ப்பித்த எல்லாவற்றையும் நாம் மக்களுக்குச் சமர்ப்பித்து விட்டோம்' என்று இறுதித் தீர்ப்பு நாளில் நடைபெறும் விசாரணையின் போது இறைத் தூதருக்குப் பின் நின்று சாட்சி கூற நமது சமுதாயம் தகுதியுடையதாகும். இவற்றிற்குப் பின்பும் மக்கள் நேர்வழிக்கு வரவில்லையாயின் அவர்கள் தங்கள் தவறான போக்குக்குத் தாங்களே பொறுப்பாளிகள் ஆவார்கள்.

பெரியோர்களே! முஸ்லிம்கள் எனும் தகுதி நிலையில் சொல்லாலும் செயலாலும் வழங்க வேண்டிய சான்று இதுவேயாகும். ஆனால் நாம் இப்போது உண்மையில் எத்தகைய சான்று வழங்குகிறோம் என்பதைப் பாருங்கள்!முதலில் சொல்லால் வழங்கவேண்டிய சான்றை எடுத்துக் கொள்

வோம். நமக்குள் ஒரு மிகச் சிறிய கூட்டத்தினரே எங்காவது தனிப்பட்ட முறையிலோ, குழு முறையிலோ வாய்மொழி யாலும், எழுத்தாலும் இஸ்லாத்தைப் பற்றிய மெய்ச்சான்று வழங்குகிறார்கள். அவர்களுக்குள்ளும் இதனை எவ்வகை யில் நிறைவேற்ற வேண்டுமோ அவ்வகையில் நிறைவேற்று பவர்கள் விரல் விட்டு எண்ணத்தக்கவர்களே இருக்கிறார்கள். பொறுப்புள்ள இச்சிறு தொகையினரை நீங்கள் நீக்கி விட்டால், பொதுவாக முஸ்லிம்களின் சான்று வழங்கும் செயல் இஸ் லாத்திற்குச் சாதகமாய் இல்லாமல் நேர் எதிராய்ப் போவதைப் பார்க்கலாம்.

இஸ்லாமிய வாரிசுச் சட்டங்கள் தவறானவை என்றும், (ஜாஹிலிய்யத்)* அறியாமைக் காலப் பழக்கமே சரியான தென்றும் நம் நிலக்கிழார்கள் சான்று வழங்குகின்றார்கள். இஸ் லாத்தின் சட்டங்கள் தவறானவை மட்டுமல்ல; இஸ்லாமியச் சட்டங்களின் அடிப்படைக் கண்ணோட்டமே ஏற்றுக் கொள்ளத் தக்கதல்ல என்றும், மனிதர் இயற்றிய சட்டங்களே சரியானவை என்றும் நம் வழக்குரைஞர்களும், நீதிபதிகளும், மாஜிஸ்திரேட்களும் சான்று பகர்கிறார்கள்.

தத்துவம், அறிவு, வரலாறு, கூட்டு வாழ்வு, பொருளா தாரம், அரசியல், சட்டம், ஒழுக்கம் ஆகியன பற்றி மேனாட்டு நாத்திகக் கல்வியால் பெறப்பட்ட சித்தாந்தங்களே நியாய மானவை என்றும், இஸ்லாத்தின் கண்ணோட்டம் இவ்விஷ யங்களில் விரும்பத்தக்கதல்லவென்றும் நம் கல்விக்கூடங்

---

* "ஜாஹிலிய்யத்" எனும் சொல், இஸ்லாத்திற்கு எதிராக வழங்கப் படும் ஒரு சொல்லாகும். அல்லாஹ்வின் வழிகாட்டுதலை விடுத்து யூகம், கற்பனை, மன இச்சைகளின் அடிப்படையில் தோற்றுவிக்கப்படும் அனைத்துமே ஜாஹிலிய்யத்தின் வழிமுறையாகும். இவ்வாறான செயல்முறையை எங்கு - எக்காலத்தில் மனிதன் தேர்ந்தெடுத்துக் கொண்டாலும் அம்முறை ஜாஹிலிய்யத்தின் வழி முறை என்று தான் சொல்லப்படும்.

களும், கல்வியறிஞர்களும், பேராசிரியர்களும் சான்று பகர்கிறார்கள்.

இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ரஷ்யா ஆகிய நாடுகளில் உள்ள நாத்திக மனோபாவம் கொண்ட ஆசிரியர்களிடம் உள்ள இலக்கிய படைப்பே தங்களிடமும் இருப்பதாகவும், முஸ்லிம்கள் எனும் முறையில் தங்களுடைய இலக்கியத்தில் இஸ்லாத்திற்கே உரித்தான நிலைத்த உயிர்த்துடிப்பு இல்லை என்றும் நம் நூலாசிரியர்கள் சான்று வழங்குகிறார்கள்.

தர்க்கவாதங்களுக்காகவும், பிரச்னைகளைத் தீர்ப்பதற் காகவும், பரப்புரைக்காகவும் முஸ்லிமல்லாதாரிடம் உள்ள முறைகளே தங்களிடமும் இருப்பதாக நமது பத்திரிகை உலகம் சான்று வழங்குகிறது.

கொடுக்கல் வாங்கல் தொடர்பாக இஸ்லாம் ஏற்படுத்தி யுள்ள வரையறைகள் நடைமுறைக்கு ஏற்றவையல்ல என்றும், இஸ்லாத்தை மறுப்பவர்கள் கடைப்பிடித்து வரும் நியதிகளின்படிதான் வாணிபம் நடத்த முடியும் என்றும் நம் வியாபாரிகளும் தொழில் அதிபர்களும் சான்று வழங்கு கிறார்கள்.

சமூக, தேசிய சுலோகங்கள், சமூக கோரிக்கைகள், சமூக பிரச்னைகளைத் தீர்க்கும் முறைகள், அரசியல் அமைப்புகள், கொள்கைகள் ஆகியவை எல்லாம் முஸ்லிம் அல்லாதாரிடம் உள்ளவை போன்றே தங்களிடமும் இருப்பதாகவும், இஸ்லாம் இவை தொடர்பாக ஒரு வழியையும் காட்டவில்லை எனறும் நம் தலைவர்கள் சான்று வழங்குகிறார்கள்.

பிறருக்கு எடுத்துரைக்கக் கூடிய அளவுக்கு ஒரு மார்க்கத்தைத் தாங்கள் பெற்றிருக்கவே இல்லை என்றும், தங்களுடைய காலத்தை அதற்காகச் செலவிடத் தேவை யில்லை என்றும், உலகத்தையும் அதன் விவகாரத்தையும்

தவிர மற்றவை நமது சொல்லாற்றலைப் பயன்படுத்து வதற்கு உரியனவல்லவென்றும் நம் பொதுமக்கள் சான்று வழங்குகிறார்கள். நமது சமுதாயம் கூட்டாக இந்தியாவில் மட்டுமின்றி உலகமெங்கும் வழங்கும் சொற்சான்று இதுவேயாகும்.

இனி செயல் மூலம் வழங்கும் சான்றின் பக்கம் வாருங் கள்! அதன் நிலை, சொற்சான்றைக் காட்டிலும் மிகவும் மோசமாயிருக்கிறது. தங்கள் வாழ்க்கையில் இஸ்லாத்தின் மேன்மையைப் பிரதிபலித்துக் கொண்டிருக்கும் தூயவர்கள் எங்கோ ஒரு சிலர் ஐயமின்றிக் காணப்படுகிறார்கள். ஆனால் பெரும்பான்மையோரின் நிலை என்ன? தனிப்பட்ட முறையில் பொதுவாக முஸ்லிம்கள் இஸ்லாத்தை எவ்வாறு பிரதிபலிக்கிறார்கள் எனில், நிராகரிப்பினால் தயார் செய்யப்பட்ட மக்களைக் காட்டிலும் இஸ்லாத்தின் கீழ் வளர்ச்சி பெறும் மக்கள், எவ்வகையிலும் மேலானவர் களாகவோ, மாறுபட்டவர்களாகவோ இல்லை; ஆனால் பல வகைகளில் மற்றவர்களுடன் ஒப்பிடும் போது மிகவும் மோசமானவர்களாகவே இருக்கிறார்கள் என்று கருதும் வண்ணம் அவர்கள் நடத்தை அமைந்துள்ளது. முஸ்லிம்கள் பொய் சொல்லக் கூடும்; நம்பிக்கை மோசடி செய்யக்கூடும்; கொடுமை இழைக்கக் கூடும்; ஏமாற்றக் கூடும்; களவு, வழிப்பறி செய்யக்கூடும்; கலவரம், குழப்பம் விளைவிக்கக் கூடும்; வெட்கங்கெட்ட, மானங்கெட்ட செயல்கள் அனைத் தையும் செய்யக்கூடும். இவ்வகையான ஒழுக்கங்கெட்ட எல்லாச் செயல்களிலும் அவர்களின் நிலை காஃபிர் (இறை நிராகரிப்பு) சமுதாயத்தைக் காட்டிலும் குறைந்ததாயில்லை. நமது சமுதாயவியல், பழக்க வழக்கம், சடங்குகள், வைபவங்கள், சந்தைகள், விழாக்கள், உருசுகள், கொண் டாட்டங்கள், கூட்டங்கள், ஊர்வலங்கள் ஆகியவற்றைக் கொண்ட கூட்டு வாழ்வின் எந்த ஒரு துறையிலும்

இஸ்லாத்தின் உண்மையைச் சரி வரப் பிரதிபலிக்கும் ஒரு சிறு செயல்கூடக் காணப்படவில்லை. இஸ்லாமியர்கள் இஸ்லாத்திற்குப் பதிலாக (ஜாஹிலிய்யத்) அறியாமையையே உயர்வாக மதிக்கிறார்கள் என்பதற்கு இதுவே போதிய ஆதாரமாகும்.

நாம் கல்விக்கூடங்களை நிறுவினால் கல்வி, கல்வி முறை, பாடத்திட்டம், கல்வியின் உயிரோட்டம் ஆகிய அனைத்தையும் இறைமறுப்பாளர்களிடமிருந்து பெறுகிறோம். நாம் கழகங்களை அமைத்தால் முஸ்லிமல்லாதவரின் கழகத்தைப் போலவே அமைத்துக் கொள்கிறோம். அதன் நோக்கம், நிர்வாகம், செயல்முறை யாவற்றையும் அவர்கள் பாணியிலேயே அமைத்துக் கொள்கிறோம். நமது முழு சமுதாயமும் கூட்டாக ஏதாவது முயற்சியில் ஈடுபட்டால் அதன் கோரிக்கை, முயற்சியின் பாங்கு, கூட்டு முறையின் விதிகள், அவற்றின் அமைப்பு, சொற்பொழிவுகள், விளக்கங்கள் ஆகிய அனைத்துமே முற்றிலும் இறைநிராகரிப்புச் சமூகங்களின் சாரமாகவே விளங்குகின்றன. வியப்பு என்னவெனில், எங்கெங்கே நமது சுதந்திரமான அல்லது அரைச் சுதந்திரம் பெற்ற அரசுகள் இருக்கின்றனவோ அங்கும் கூட அரசாங்க அடிப்படைகள், அரசாங்க அமைப்புகள், சட்டங்களின் தொகுப்பு ஆகிய யாவற்றையும் நாம் இறைநிராகரிப்பாளர்களிடமிருந்து பெற்றுக் கொண்டுள்ளோம். சில அரசுகளிலோ ஷரீஅத்திலுள்ள தனியார் சட்டத்தை (Personal Law) மட்டும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். மற்றும் சிலரோ அவற்றையும் சிதைக்காமல் விட்டு வைக்கவில்லை. சமீபத்தில் "லாரன்ஸ் பிரவ்ன்" (Lawrence Brown) என்னும் ஓர் ஆங்கிலேயர், "தி பிராஸ்பெக்ட்ஸ் ஆப் இஸ்லாம்" (The Prospects of islam) எனும் தமது நூலில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

“நாங்கள் (ஆங்கிலேயர்) இந்தியாவில், இஸ்லாமியக் குற்றவியல் சட்டங்களைப் பத்தாம்பசலியானவை என்றும், காலத்துக்கு ஒவ்வாதவை - நடைமுறைக்கு ஏற்றவை அல்ல என்றும் கருதி அவற்றை நீக்கி விட்டு ஷரீஅத்திலுள்ள தனியார் சட்டத்தை மட்டும் விட்டு வைத்தபோது முஸ்லிம்களுக்கு அது மிகவும் வெறுப்பைத் தந்தது. ஏனெனில், இஸ்லாமிய ஆட்சியில் ஒரு காலத்தில் இதர மதத்தவரின் (திம்மி) நிலை எவ்வாறு இருந்ததோ அதே நிலை தங்களுக்கும் ஏற்பட்டு விடும் என்று அவர்கள் கருதியதே காரணமாகும். ஆனால் இப்போதோ இந்தியாவில் முஸ்லிம்கள் அதை விரும்பி ஏற்றுக் கொண்டது மட்டுமின்றி, முஸ்லிம் அரசுகளும் இந்த விஷயத்தில் நம்மைப் பின்பற்றுகின்றன. துருக்கி, அல்பேனியா ஆகிய நாடுகளோ ஒருபடி மேலே சென்று, நம்முடன் கருத்தொற்றுமை கொண்டு திருமணம், மணவிலக்கு, வாரிசு உரிமைகள் தொடர்பாகக் கூட நமது படித்தரத்துக்கு ஏற்பச் “சீர்திருத்தங்கள்” செய்து கொண்டிருக்கின்றன. ‘சட்டங்களுக்கு இறைவனின் சித்தமே மூலாதாரம்’ எனும் முஸ்லிம்களின் கருத்தோட்டம் ஒரு “பக்திமயமான கற்பனை” (Piousfiction) என்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை என்பது வெட்டவெளிச்சமாகி விட்டது!”

இது உலக முஸ்லிம்கள் அனைவரும் அநேகமாக ஒன்றுபட்டு இஸ்லாத்திற்கு எதிராக வழங்கும் நடைமுறைச் சான்றாகும். நாம் வாயால் என்ன சொன்னபோதிலும் சரி, ‘இந்த மார்க்கத்தின் எந்த அம்சமும் நமக்குப் பிடிக்கவில்லை; அதன் எந்த ஒரு விதியிலும் நமது நன்மையையோ, ஈடேற்றத்தையோ நாம் காணமுடியவில்லை’ என்றே நமது சமூக ரீதியான நடைமுறைச் செயல்கள் சான்று வழங்குகின்றன.

சத்தியத்தை மறைத்து, அசத்தியத்தின் சான்று வழங்கும்

கொடிய குற்றத்தை நாம் செய்து வருகிறோம். இதற்கு இறைநீதி வழங்கும் தண்டனை எதுவோ அதையே நாம் அனுபவிக்க நேர்ந்துள்ளதை இப்பொழுது கண் கூடாகக் கண்டு வருகிறோம். ஒரு சமூகம் இறைவனின் அருட் கொடையை மறுத்தால் - தன் இறைவனுக்குத் துரோகம் செய்தால் - இறைவன் அதற்காக மறுமையில் மட்டுமின்றி இம்மையிலும் வேதனையளிக்கிறான். இறைவனின் நியதி யூதர்களின் விஷயத்தில் நிறைவேறி விட்டிருக்கிறது. இப்போது நாம் குற்றக்கூண்டில் நிற்கிறோம். இக்குற்றத்திற் கான தண்டனையை யூதர்களுக்கு மட்டும் அளிக்கும் அளவுக்கு யூதர்களிடம் இறைவனுக்குத் தனிப்பட்ட வெறுப்பு ஏதும் இருக்கவில்லை. அவர்களுக்கு எந்தக் குற்றத்திற்காகத் தண்டனையளித்தானோ அதே குற்றத்தை நாம் செய்துவிட்டு, தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் எனும் அளவுக்கு இறைவனுக்கு நம்மிடம் எத்தகைய தனிப்பட்ட உறவும் இல்லை.

உண்மை என்னவெனில், நாம் மெய்ச்சான்று வழங்கு வதில் எவ்வளவுக்கெவ்வளவு குறைபாடு செய்து வந் தோமோ, பொய்ச்சான்று வழங்குவதில் எவ்வளவுக்கு எவ் வளவு முன்னேறி வந்தோமோ அவ்வளவுக்கு அவ்வளவு நாம் விரைவாக வீழ்ச்சியடைந்து வந்திருக்கிறோம்; கடந்த ஒரே நூற்றாண்டுக்குள் மொராக்கோவிலிருந்து தூரக் கிழக்கு வரையில் எல்லா நாடுகளும் நமது கையை விட்டுப் போய் விட்டன. முஸ்லிம் சமுதாயங்கள் ஒவ்வொன்றாக வீழ்த்தப் பட்டும், தாழ்த்தப்பட்டும் போய்விட்டன. முஸ்லிம்களின் பெயர் மரியாதைக்குரியதாகவோ பெருமைக்குரியதாகவோ இருக்கவில்லை. அது இழிவு, தாழ்வு, வேதனை, பிற்போக்கு ஆகியவற்றின் சின்னமாகி விட்டது. உலகில் எங்கும் நமது மானம் எஞ்சியிருக்கவில்லை. சில இடங்களில் நாம் படுகொலை செய்யப்பட்டோம். சில இடங்களில் வீடுகளை

விட்டுத் துரத்தப்பட்டோம். சில இடங்களில் நாம் கடுமையான தண்டனைக்கு ஆளானோம். சில இடங்களில் ஊழியம் செய்யவும், அடிமைப்பணி புரியவும் உயிரோடு விட்டு வைக்கப்பட்டோம். எங்கே முஸ்லிம் அரசுகள் எஞ்சியுள்ளனவோ அங்கும் அவை தோல்வி மேல் தோல்வி கண்டன! இன்று அவை வெளிநாட்டு சக்திகளுக்கு அஞ்சி நடுங்கிக் கொண்டிருக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. சொல்லாலும் செயலாலும் அவர்கள் இஸ்லாத்தின் சான்று வழங்கியிருந்தால் குஃப்ருக் கொடிதாங்கிகள் அவர்களுடைய அச்சத்தால் நடுநடுங்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும்.

வெகுதூரம் போக வேண்டியதில்லை. இந்தியாவிலேயே உங்கள் நிலையைப் பார்த்துக் கொள்ளுங்கள். சத்தியச் சான்று வழங்குவதில் குறைபாடு செய்ததோடு சொல்லாலும், செயலாலும் உண்மைக்கு மாற்றமான சான்று வழங்கிக் கொண்டிருப்பதால் ஏற்பட்ட விளைவு, நாடு முழுவதும் உங்கள் கையை விட்டுப் போய் விட்டது. முதலில் மராட்டியர், சீக்கியர் ஆகியோர் கைகளால் சீரழிந்தீர்கள். பிறகு ஆங்கிலேயரிடம் சிக்கி அடிமைப்பட நேர்ந்தது. இப்போது முன்னைய சீரழிவுகளைக் காட்டிலும் பெரிய சீரழிவு வந்து கொண்டிருக்கின்றது. எல்லாவற்றைக் காட்டிலும் இன்று உங்கள் முன் வந்துள்ளது சிறுபான்மையோர், பெரும்பான்மையோர் எனும் பிரச்னையாகும். இந்துப் பெரும்பான்மையோர் உங்களை அடிமைகள் ஆக்கிவிடக் கூடாதே என்று நீங்கள் அச்சத்தால் நடுங்கிக் கொண்டிருக்கிறீர்கள். பிராமணரல்லாதார், முன்பு அடைந்த கதியை நீங்கள் அடைந்து விடக்கூடாதே என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இறைவனுக்காக என்னிடம் கூறுங்கள்! நீங்கள் இஸ்லாத்தின் சான்று வழங்குபவர்களாய் விளங்கியிருந்தால், உங்களுக்கு ஆபத்து விளையும் அளவிற்கு இங்கு ஒரு பெரும்பான்மை உருவாகியிருக்குமா? நீங்கள்

சொல்லாலும், செயலாலும் இஸ்லாத்தின் சான்று வழங்கு வோராய் மாறிவிட்டால் இந்தச் சிறுபான்மை பெரும் பான்மைப் பிரச்னை சில ஆண்டுகளுக்குள்ளாகவே தீர்ந்து போகாதா?

(முன்பு) அரபு நாட்டில் மிக்க மாச்சரியம் கொண்ட, கொடுமை வாய்ந்த பெரும்பான்மையோர், லட்சத்துக்கு ஒருவரே கொண்ட (முஸ்லிம்) சிறுபான்மையோரை உல கிலிருந்தே ஒழித்துக் கட்டிவிட முடிவு செய்திருந்தார்கள். இஸ்லாத்தின் சான்று சரிவர வழங்கப்பட்டதால், அச்சான் றானது பத்தே ஆண்டுகளுக்குள் அதே சிறுபான்மையோரை நூற்றுக்கு நூறு பெரும்பான்மையோராக மாற்றி அமைத்து விட்டது! பிறகு அந்த இஸ்லாமிய மெய்ச்சான்று வழங்குபவர்கள் அரபு நாட்டை விட்டு வெளியே புறப்பட்ட போது இருபத்தைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே துருக்கிஸ் தானிலிருந்து மொராக்கோ வரை வாழ்ந்து வந்த சமுதாயங் கள் அனைத்தும், அவர்களுடைய சத்தியச் சான்றின் மீது நம்பிக்கைக் கொண்டு (முஸ்லிம்களாக) மாறிக்கொண்டே போயின. எங்கே நூற்றுக்கு நூறு மஜூஸிகளும் (நெருப்பை வணங்குவோர்களும்), உருவ வழிபாட்டுக்காரர்களும், கிறிஸ்துவர்களும் இருந்து வந்தார்களோ அங்கே நூற்றுக்கு நூறு முஸ்லிம்கள் எனும் நிலை ஏற்படத் தொடங்கி விட்டது. எவ்விதப் பிடிவாதமும், மாச்சரியங்களும், எத்தகைய குறுகிய மதக் கண்ணோட்டமும் சத்தியத்தின் உயிருள்ள - உண்மை யான சான்றின் முன் நிலை கொள்ளும் அளவுக்குச் சக்தி பெற்றிருக்கவில்லை. இப்போது நீங்கள் சீரழிந்து கொண்டிருக்கிறீர்கள். மேலும் புதிய பெரிய சீரழிவின் ஆபத்தில் இருப்பதாயும் நீங்கள் உணருகிறீர்கள். இது சத்தியச் சான்றை மறைத்ததாலும், அசத்தியச் சான்றை வழங்கியதாலும் ஏற்பட்ட தண்டனை என்பதைத் தவிர வேறு என்ன?

இத்தண்டனைகள் நீங்கள் புரிந்த குற்றத்திற்காக உலகில் உங்களுக்குக் கிடைத்து வருகின்றன. இவை மட்டுமல்ல; இவற்றைக் காட்டிலும் கடுமையான தண்டனை பெறும் அச்சம் இருந்து வருகிறது. எதுவரை சத்தியச் சான்று வழங்குபவர்கள் என்னும் முறையில் உங்கள் கடமையை நிறைவேற்றவில்லையோ அதுவரை உலகில் நிலவும் வழிகேடுகள், கொடுமை, சச்சரவு, கிளர்ச்சி, ஒழுக்கக்கேடு, குணக்கேடு ஆகியவை உண்டானதைப் பார்த்துக் கொண்டிருந்த பாவத்திலிருந்து நீங்கள் தப்பிக்கவே முடியாது. நீங்கள் அந்தத் தீமைகளின் உற்பத்திக்குப் பொறுப்பாளர்களாய் இல்லா விட்டாலும், அவை பிறந்த காரணங்களை நிலைத்திருக்கச் செய்வதையும், அவற்றைப் பரவச் செய்வதையும் அனுமதித்தவர்களாய் இருக்கிறீர்கள்.

பெரியோர்களே! நான் கூறியவற்றிலிருந்து முஸ்லிம் எனும் முறையில் நாம் என்ன செய்யக் கடமைப்பட்டிருந்தோம்; நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பது உங்களுக்குத் தெரிந்து போயிருக்கும். நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோமோ – அவற்றின் விளைவை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம் என்பதும் புரிந்து போயிருக்கும். இந்தக் கோணத்திலிருந்து நீங்கள் சிந்தனை செய்தால், ஒரு விஷயம் உங்களுக்குத் தெளிவாகப் புரிந்து விடும். முஸ்லிம்கள் இந்தியாவிலும் இதர உலக நாடுகளிலும் எப்பிரச்னைகளைத் தங்கள் சமுதாய வாழ்வின் அசல் பிரச்னையாய்க் கருதிக் கொண்டிருக்கிறார்களோ, எவற்றைத் தங்கள் சொந்த அறிவாலும், மிகுதியாய்ப் பிறரிடம் கற்ற யோசனைகளாலும் தீர்ப்பதற்காக ஓயாது உழைத்துக் கொண்டிருக்கிறார்களோ உண்மையில் அவற்றுள் எது ஒன்றுமே அவர்களுடைய அசல் பிரச்னை அல்ல. அவற்றைத் தீர்ப்பதில் ஈடுபடுத்தும் சக்தி, காலம், பொருட்செலவு ஆகிய அனைத்தும் வீணேயாகும்.

ஒரு சிறுபான்மைச் சமூகம், ஆதிக்கம் செலுத்தும் பெரும்பான்மைச் சமூகத்தின் மத்தியில் இருந்து கொண்டே தங்கள் வாழ்வையும், நலன்களையும், உரிமைகளையும் எப்படிப் பாதுகாப்பது? பெரும்பான்மையோரின் மத்தியில் இருக்கும் ஒரு சிறுபான்மைச் சமூகம், சாத்தியமான எல்லைகளுக்குள் பெற வேண்டிய அதிகாரங்களை எப்படிப் பெறுவது? ஓர் அடிமைப்படுத்தப்பட்ட சமூகம், ஆதிக்கம் செலுத்தும் சமூகத்தின் பிடியிலிருந்து எப்படி விடுதலை பெறுவது? ஒரு வலிமையற்ற சமூகம் தன்னை ஒரு வலிமை வாய்ந்த சமூகத்தின் கொடுமைகளிலிருந்து எப்படிக் காத்துக் கொள்வது? பிற்பட்ட சமூகம் உலகில் உள்ள பலம் வாய்ந்த சமூகங்களுக்கு வாய்த்துள்ள வளத்தையும் வலிமையையும் எவ்வாறு அடைவது? - எனும் கேள்விகளும் இன்னும் இவை போன்ற இதர பிரச்னைகளும் முஸ்லிமல்லாத சமூகங் களுக்கு நிச்சயமாக முக்கியமானவையாயும், மிகவும் முதன்மை வாய்ந்தவையாயும் இருக்கலாம். அவர்களின் கவனங்கள், முயற்சிகள் ஆகியவற்றின் மையமாகவும், அச்சாணியாகவும் அவை விளங்கலாம்.

ஆனால், முஸ்லிம்களாகிய நமக்கு அவை மட்டுமே முக்கியமான பிரச்னைகள் அல்ல; மாறாக நம் அடிப்படைக் கடமையின் பால் நாம் கொண்டிருந்த, இன்னும் கொண் டிருக்கிற அலட்சியத்தின் பலன்களே அவை. நாம் நமது கடமையைச் செய்திருந்தால், மிகவும் சிக்கலான - அமைதி யைக் குலைக்கும் இத்தகைய பிரச்னைகள் நிறைந்த காடு நமக்காக உண்டாகியே இருக்காது. இப்போதும் நாம் இந்தக் காட்டை வெட்டுவதில் நமது சக்திகளை விரயம் செய்வதற்கு மாறாக, நாம் நமது கடமையை நிறைவேற்றுவதில் முழுக் கவனமும், முயற்சியும் எடுத்துக் கொண்டால் நம் வாழ்வில் மட்டுமின்றி உலகம் முழுவதிலும் அமைதியைக் குலைக்கும் பிரச்னைகள் நிறைந்த இந்தக் காடு, பார்த்துக் கொண்டிருக்கும்

போதே மறைந்து விடும். நாமே உலகச் செம்மைக்கும், சீர் திருத்தத்திற்கும் பொறுப்பாளிகளாய் இருந்தோம். நாம் அந்த மகத்தான – கண்ணியமான நமது கடமையை நிறைவேற்று வதை விட்டுவிட்டதால் உலகம் முட்கள் நிறைந்த காடுகளால் நிரம்பிவிட்டது. அவற்றுள் மிகவும் முட்கள் மலிந்த பகுதி நமது பங்கில் எழுதப்பட்டு விட்டது.

துரதிருஷ்டவசமாக முஸ்லிம்களின் மதத்தலைவர்களும் அரசியல் வழிகாட்டிகளும் இந்த விஷயத்தைப் புரிந்து கொள்ள முயல்வதில்லை. எல்லா இடங்களிலும் முஸ்லிம் களாகிய உங்களுக்குத் தலையாய பிரச்னைகள் சிறுபான்மை மயோர் – பெரும்பான்மையோர், நாட்டு விடுதலை, சமூகப் பாதுகாப்பு, லோகாயத முன்னேற்றம் பற்றிய பிரச்னைகள்தாம் என்று நம்பிக்கையூட்டப்படுகிறது. தவிர, இந்தத் தலைவர்கள் அப்பிரச்னைகளைத் தீர்க்க முஸ்லிமல்லாதவர்களிட மிருந்து கற்ற அதே யோசனைகளையே முஸ்லிம்களுக் கும் போதித்து வருகிறார்கள். இறைவன் இருப்பதை நான் எவ்வளவு உறுதியாக நம்புகிறேனோ அவ்வளவு உறுதியாகவே ‘உங்களுக்குத் தவறான வழிகாட்டப்படுகிறது’ என்பதையும் அவ்விதிகளின்படி நடந்து நீங்கள் ஒருபோதும் உங்கள் நலன்களைப் பெற முடியாது என்பதையும் நம்புகிறேன்.

உங்கள் வாழ்வின் முக்கிய பிரச்னை என்னவென்பதை நான் குழப்பம் ஏதுமின்றி மிகத் தெளிவாக எடுத்துக் கூறாவிட்டால் உங்களுக்குப் பெரிய கேடு செய்தவனாவேன். என் அறிவில் – உங்கள் நிகழ்கால நிலையும், வருங்கால நிலையும் இறைத்தூதரின் மூலம் உங்களுக்கு வழங்கப் பட்டுள்ள அறிவுரைகளுடன் நீங்கள் நடந்துகொள்ளும் விதத்துடன் தொடர்புடையதாக இருக்கிறது. எதன் காரணமாக நீங்கள் முஸ்லிம்கள் என்று கூறப்படுகிறீர்களோ, எதன் தொடர்பினால் நீங்கள் விரும்பினாலும் விரும்பா

விட்டாலும் எந்த வகையிலும் உலக மக்களால் இஸ்லாத்தின் பிரதிநிதிகளாய்த் தீர்மானிக்கப்படுகிறீர்களோ, அதை நீங்கள் சரிவரப் பின்பற்றினால் – சொல்லாலும், செயலாலும் அதன் முழுமையான சான்று வழங்கினால் – உங்கள் கூட்டுச் சிறப் பியல்புகளால் இஸ்லாத்தின் உண்மையான மாண்பு சரிவர வெளியானால் நீங்கள் இம்மையில் தலைநிமிர்ந்து வாழ்வீர் கள்; மறுமையிலும் வெற்றி பெற்றே தீர்வீர்கள். உங்கள் மீது படர்ந்துள்ள அச்சம், துயரம், அவமானம், இழிவு, தாழ்வு, அடி மைத்தனம் ஆகியவை சில ஆண்டுகளுக்குள் விலகிப் போகும். சத்தியத்தின்பால் உங்கள் அழைப்பும் தூய்மையான வாழ்வும் பிறர் நெஞ்சங்களைக் கவர்ந்து கொண்டே போகும். உங்கள் சிறப்பும், நாணயமும் உலகெங்கும் பேசப்படும். உங்களிடம் நியாயம் கிடைக்கும் எனும் நம்பிக்கை பிறரிடம் வளரும். நேர்மையிலும், பொருள்களைப் பாதுகாப்பதிலும் உங்கள் மீது நம்பிக்கை ஏற்படும். உங்களின் வாய்மொழி ஆதாரமாகக் கொள்ளப்படும். நன்மைகளை உங்களிட மிருந்து எதிர்பார்ப்பார்கள். குஃப்ருக் கொடிதாங்கிகளின் நாணயம் எதுவும் உங்களுக்கு முன் எஞ்சி நிற்காது. அவர் களுடைய தத்துவங்களும் அரசியல், பொருளாதாரச் சித் தாந்தங்களும் உங்களுடைய உண்மையான – நேர்மையான செயலின் முன் முலாம் பூசப்பட்ட பொய்கள் என நிரூபண மாகி விடும். அவர்களுடைய பாசறையில் இன்று காணப் படும் சக்திகள், சிறுகச் சிறுக உங்களுடைய இஸ்லாமியப் பாசறைகளுக்கு வந்து சேர்ந்து கொண்டேயிருக்கும்.

இறுதியில் ஒரு காலம் வரும். அப்போது கம்யூனிஸம், மாஸ்கோவில் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதிலேயே கவலைகொள்ளும். முதலாளித்துவ ஜனநாயகம் வாஷிங்டன், நியூயார்க் ஆகிய நகரங்களிலேயே தன்னுடைய பாதுகாப்புக் காக நடு நடுங்கத் தொடங்கும். உலகாயதவாதம், நாத்திகம் ஆகியவை லண்டனிலும், பாரிஸிலும் உள்ள பல்கலைக்

கழகங்களில் கூட புகலிடம் பெறத் தகுதியற்றதாகி விடும். பிறவிப் பெருமையும், சமூகப் பெருமையும் பிராமணரிடையிலும், ஜெர்மானியரிடையிலும் கூட தம்மை நம்பிப் பின்பற்றுவோரைப் பெற முடியாது போகும். உலகை வெற்றி கொள்ளும் சக்தி வாய்ந்த இஸ்லாத்தின் பெயர் தாங்கிகள் மூஸா நபியின் தடியைக் கட்கத்தில் வைத்துக் கொண்டு வெறும் கம்புகளையும், கயிறுகளையும் கண்டு நடுங்கும் அளவுக்கு முட்டாள்களாயிருந்தார்கள் எனப்படும் இந்த சகாப்தம் ஒரு சோகக் கதையாக மட்டுமே வரலாற்றில் எஞ்சி நிற்கும்.

இஸ்லாத்தை உண்மையாகப் பின்பற்றுவோராயும், அதன் உண்மையான சான்று வழங்குவோராயும் மாறிவிட்டால், இத்தகைய எதிர்காலம் உங்களுக்குக் காத்திருக்கிறது. ஆனால் தற்போது உங்களுடைய போக்கு இதற்கு நேர் மாறாக இருக்கிறது. இறைவனால் அனுப்பப்பட்ட அறிவுரைகளின் மீது நச்சுப் பாம்பாக உட்கார்ந்து கொண்டு, நீங்களும் அவற்றால் பலன் பெறாததோடு, மற்றவர்களையும் அவற்றில் பலன் பெறாதவாறு தடுக்கிறீர்கள்.

முஸ்லிம்கள் என்று உங்களை நீங்களே சொல்லிக் கொண்டு – இஸ்லாத்தின் பிரதிநிதிகள் எனக் கூறிக் கொண்டு உங்கள் சொல், செயல் அனைத்திலும் மிகுதியாக அறியாமையை (ஜாஹிலிய்யத்தை)ப் பரப்புவோராயும், இறைவனுக்கு இணைவைத்தல் (ஷிர்க்), உலக ஆசை, ஒழுக்கக் கட்டுப்பாடின்மை பற்றிய சான்று வழங்குவோராயும் இருந்து வருகிறீர்கள்.

இறைவனின் வேதம் பரணில் வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் நீங்களோ நேர்வழி பெறுவதற்காக நிராகரிப்பின் தலைவர்களிடமும், தீமையின் தோற்றுவாய்களிடமும் ஓடிக் கொண்டிருக்கிறீர்கள்! இறைவனுக்கு அடிபணிவதாய்

வாதம் செய்து கொண்டு ஒவ்வொரு ஷைத்தானுக்கும், தாஃகூத்துக்கும் (இறைநெறியை விட்டு விலகிச் செல் லும் சக்திகளுக்கும்) அடிபணிந்து கொண்டிருக்கிறீர்கள். நட்பும், பகைமையும் ஒவ்வொருவரும் சொந்த விருப்பு வெறுப் புக்காகவே வைத்துக் கொள்கிறீர்கள். ஆனால் அவற்றை இஸ்லாத்துக்காகவே செய்வதாகக் கூறிக் கொள்கிறீர்கள்.

இவ்வாறாக, இஸ்லாமிய அருட்பேற்றை உங்கள் வாழ்வி லிருந்து விலக்கி வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். மேலும் உலகத்தை அதன் பக்கம் விருப்புக் கொள்ளச் செய்வதற்குப் பதிலாய் – வெறுப்புக் கொள்ளும்படிச் செய்துக் கொண்டிருக் கிறீர்கள். உங்கள் போக்கு இவ்வாறாக இருந்தால் உங்கள் இம்மையும் சீர்திருந்தப் போவதில்லை; உங்கள் மறுமையும் சீர்படப் போவதில்லை. இறைவனின் நியதிப்படி இந்தச் செயலுக்கு எவ்விளைவுகள் ஏற்பட வேண்டுமோ அவற் றையே நீங்கள் அனுபவத்தில் பார்த்துக் கொண்டிருக்கிறீர் கள். இந்த நிகழ்காலத்தைக் காட்டிலும் எதிர்காலம் மிகவும் மோசம் அடைந்தாலும் வியப்பதற்கில்லை.

இஸ்லாமியப் போர்வையை எடுத்து விட்டு வெளிப்படை யாய்க் குஃப்ரை ஏற்றுக் கொள்ளுங்கள். அப்போது குறைந்த பட்சம் உங்கள் உலகம் – அமெரிக்கா, ரஷ்யா, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் உலகம் எவ்வாறு அமைந்திருக்கிறதோ, அவ்வாறே அமைந்து விடும். முஸ்லிமாயிருந்தும் முஸ்லி மல்லாதவரைப் போல் வாழ்வதும், இறைமார்க்கத்தின் தவறான பிரதிநிதிகளாயிருந்து நேர்வழியின் கதவை உலகத்திற் கெதிராக அடைத்து விடுவதும் பெரும் குற்றமாகும். இக்குற் றம் உலகில் உங்களை வாழவும், வளரவும் விடாது. இக்குற் றத்திற்கு குர்ஆனில் கூறப்பட்ட தண்டனையை உங்களால் தடுக்கவே முடியாது. இதற்கு உயிருள்ள சான்றாக யூதர்களின் சமூகம் உங்கள் முன் இருக்கிறது. ஏக தேசியத்துவத்தை (Joint

Nationality) குறைந்த பட்சத் தீமையாய் நீங்கள் ஏற்றுக் கொண்டாலும் சரி, அல்லது உங்களுடைய தனி சமுதாயத் துவத்தை ஒப்புக் கொள்ள வைத்து, தனி சமுதாயம் என்னும் அடிப்படையில் உரிமைகளைப் பெற முயன்றாலும் சரி, இந்தத் தண்டனையைத் தடுக்கவே முடியாது. நீங்கள் இக்குற் றத்திலிருந்து விலகி விடுவது ஒன்றே இதைத் தவிர்ப்பதற்கு ஒரே வழியாகும்.*

எந்த நோக்கத்தோடு எந்த வேலையைச் செய்ய ஜமா அத்தே இஸ்லாமியை நாங்கள் நிறுவியுள்ளோம் என்பதை இப்போது நான் சுருக்கமாக விளக்குகிறேன்.

இஸ்லாம் தங்களின் தீன் – மார்க்கம் என்று யாரெல்லாம் ஏற்றுக் கொள்கிறார்களோ, அவர்களுக்கு எல்லாம் 'இதை உண்மையிலேயே உங்கள் தீனாக ஆக்கிக் கொள்ளுங்கள்' என்றே அழைப்பு விடுக்கிறோம். தனிப்பட்ட முறையில் இதை உங்கள் வாழ்விலும் கூட்டு முறையில் உங்கள் வீடு, குடும்பம், சமூகம், கல்விக்கூடம் ஆகிய இடங்களிலும், இலக்கியம், பத்திரிகை உலகம், உங்கள் விவகாரங்கள்,

---

* இவ்வுரை 1946-ஆம் ஆண்டில் நிகழ்த்தப்பட்டது. அன்றிருந்த முஸ்லிம்களின் பிரச்னைகளைத் தீர்க்க இரு ஆலோசனைகள் கூறப்பட் டன. இங்கு உன்னத இஸ்லாமிய அரசியல் அமைப்பு ஏற்படுத்த வாய்ப் பில்லை. எனவே, குறைந்தபட்ச தீமையாய் ஏக தேசியக் கொள்கையை (Joint Nationality) ஏற்று அதாவது இந்துக்கள், முஸ்லிம்கள், மற்றவர்கள் எல்லாரும் ஒரே தேசிய சமூகத்தினர் என்பதை ஏற்று அதன்படி முஸ்லிம் களின் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டுமெனச் சிலர் வாதித்தனர். மற்றும் சிலர், முஸ்லிம்களுடைய தனி சமுதாயத்துவத்தை ஒப்புக் கொள்ள வைத்து, அதன் அடிப்படையில் பிரச்னைகளைத் தீர்ப்பதுதான் சிறந்தது என விவாதித்தனர். இவ்விரு கருத்துகளைத்தான் மௌலானா அவர்கள் இங்குக் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்கள் கூறியுள்ளது எத்துணைப் பொருள் செறிந்தது, உண்மையானது என்பதைப் பாகிஸ்தானிலும், இந்தியாவிலும் வாழும் முஸ்லிம்களின் இந்த 30 ஆண்டுகால வரலாறு தெளிவாக்கி விட்டது. *(ஷிஹாப்)*

கொடுக்கல் வாங்கல், சங்கங்கள், சமுதாய நிறுவனங்கள் ஆகிய எல்லாவற்றிலும், உங்கள் சமுதாயக் கொள்கையிலும் செயல் ரீதியாய்த் தீனை நிலைநாட்டுங்கள். உங்கள் சொல்லாலும், செயலாலும் உலகின் முன்னிலையில் இக் கொள்கை மெய் என்பதற்குச் சான்று வழங்குங்கள் என்று அழைப்பு விடுக்கிறோம். முஸ்லிம் எனும் அந்தஸ்தில் தீனை நிலைநாட்டுதலும் - சத்தியத்திற்குச் சான்று வழங்குதலும் உங்கள் வாழ்வின் முக்கிய நோக்கமாயிருக்கிறது. ஆகையால் உங்கள் முயற்சிகள், செயல்கள் ஆகிய எல்லாவற்றுக்கும் அவ்வாறு சான்று வழங்குதலையே அச்சாணியாய்க் கொள்ள வேண்டும். இதற்கு எதிரான ஒவ்வொரு விஷயத்திலிருந்தும் ஒவ்வொரு செயலிலிருந்தும், எவற்றால் இஸ்லாம் தவறாய்ப் பிரதிபலிக்கப்படுகிறதோ அவற்றிலிருந்தும் விலகிக் கொள்ளுங்கள்.

இஸ்லாத்தை முன் வைத்து உங்கள் சொல், செயல் ஆகிய வற்றின் போக்கை மறுபரிசீலனை செய்யுங்கள். தீன் முழுக்க முழுக்க நடைமுறையில் நிலைநாட்டப்படுவதற்கு வேண்டிய பணியில் உங்கள் எல்லா முயற்சிகளையும் ஈடுபடுத்துங்கள். இஸ்லாத்தை முழுமையாய்த் தங்களுக்கு விளக்கி நேர்வழி தெளிவுபடுத்தப்படவில்லை என்று வாதம் புரியாத நிலையில் உலக மக்களை வைத்திடும் அளவுக்கு வலுவாயும் விரிவா யும் தெளிவாயும் உலகிற்கு தீனின் சான்றை சரிவர வழங்குங் கள் என்றே அழைக்கின்றோம்.

ஜமாஅத்தே இஸ்லாமி நிறுவப்பட்டதன் ஒரே நோக்கம் இதுவேயாகும். இந்த நோக்கத்தை நிறைவு செய்வதற்காக நாம் கையாண்டுள்ள முறை என்னவெனில், எல்லாவற்றுக் கும் முதலாவதாக முஸ்லிம்களுக்கு அவர்களின் கடமையை நினைவூட்டுகிறோம். மேலும் இஸ்லாம் என்பதென்ன, அதன் கோரிக்கைகள் எவை, முஸ்லிம் ஆவதன் பொருள் என்ன, முஸ்லிம் ஆவதால் மனிதன் மீது என்னென்ன பொறுப்புகள்

சுமத்தப்படுகின்றன என்பதைத் தெளிவாக அவர்களுக்கு விளக்குகிறோம்.

இந்த விஷயத்தைப் புரிந்து கொண்டவர்களுக்கு, அடுத் தாற்போல இஸ்லாத்தின் எல்லாக் கோரிக்கைகளும் தனிப் பட்ட முயற்சியால் நிறைவு பெற முடியாது; அவற்றைப் பூர்த்தி செய்து வைப்பதற்குக் கூட்டு முயற்சி இன்றியமை யாதது என்பதைத் தெளிவுபடுத்துகிறோம். தீனின் மிகச் சிறிய பகுதியே தனிப்பட்டவர் வாழ்வுடன் தொடர்புடையதாகும். அதை நீங்கள் நிலைநாட்டி விட்டால் தீன் முழுவதும் நிலை நாட்டப்பட்டதாகாது. அதன் சான்றும் சரிவர வழங்கப்பட்ட தாகாது. கூட்டு வாழ்வில், குஃப்ருடைய அமைப்பின் ஆதிக் கம் மேலோங்கி இருக்கும் நிலையில் – தனிப்பட்ட வாழ்வுக் குரிய தீனின் பகுதியையும் நிலை நாட்ட முடியாது. கூட்டு வாழ்வில் நிலவும் குஃப்ருடைய ஆதிக்கப்பிடி, உங்கள் தனி வாழ்வில் உள்ள இஸ்லாத்தின் வட்டத்தை நாளுக்கு நாள் குறைத்துக் கொண்டே போகும். எனவே முழு தீனை நிலை நாட்டவும், அதன் சான்றைச் சரிவர வழங்கவும், முஸ்லிம் களாயிருப்பதால் ஏற்பட்டுள்ள கடமைகளை உணர்ந்து அவற்றை நிறைவேற்ற வேண்டும். இந்த எண்ணம் கொண் டோர் அனைவரும் ஒன்று திரண்டு கட்டுப்பாடான முறை யில் தீனை செயல்பூர்வமாய் நிலைநாட்டவும், உலகுக்கு அதன் பக்கம் அழைப்பு விடுக்க முயற்சிகளை மேற்கொள்ள வும், தீனை நிலைநாட்டும் (இகாமதே தீன்) முயற்சியிலும், தீனின் அழைப்பு விடுப்பதிலும் குறுக்கிடும் எல்லாத் தடை களையும் அகற்றிடவும் உழைப்பு இன்றியமையாததாகும்.

இக்காரணத்தால்தான் தீனில் "ஜமாஅத்" மிகவும் முக்கியமானது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. தீனை நிலை நாட்டுவதற்காகவும், தீனின் அழைப்பிற்காகவும் ஒரு ஒழுங்குமுறை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதாவது, முதலில் ஒரு ஜமாஅத் இருக்க வேண்டும். பிறகு அதன் மூலம்

இறைவழியில் முயற்சி செய்யப்பட வேண்டும். இக்காரணத் தால்தான் ஜமாஅத் இல்லாத வாழ்க்கை, அறியாமை (ஜாஹிலிய்யத்) மிகுந்த வாழ்க்கை என்றும் - ஜமாஅத்தி லிருந்து விலகியிருத்தல் இஸ்லாத்திலிருந்தே விலகியிருத்த லுக்கு சமம் என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.*

இவ்விஷயத்தைப் புரிந்து கொண்டு தமது தனித்துவம், தற்பெருமை ஆகியவற்றை விடுத்து தீனுக்காகத் தியாகம் செய்து, ஜமாஅத் நிர்வாகத்தின் கட்டுப்பாட்டை ஒப்புக் கொள் ளும் அளவுக்கு எவர்களின் பொறுப்புணர்வு வலுப்பெற்று விடுகிறதோ அவர்களுக்கு நாம் கூறுவது இதுதான் :

இப்போது உங்கள் முன் மூன்று வழிகள் உள்ளன. அவற்

---

* கீழ்க்கண்ட நபிமொழி இதற்கு ஆதாரமாகும்.

أَنَا آمُرُكُمْ بِخَمْسٍ اَللّٰهُ أَمَرَنِى بِهِنَّ اَلْجَمَاعَةُ
وَالسَّمْعُ وَالطَّاعَةُ وَالْهِجْرَةُ وَالْجِهَادُ فِى سَبِيْلِ اللّٰهِ
فَإِنَّهُ مَنْ خَرَجَ مِنَ الْجَمَاعَةِ قِيْدَ شِبْرٍ فَقَدْ خَلَعَ رِبْقَةَ
الإِسْلَامِ مِنْ عُنُقِهِ إِلاَّ أَنْ يُرَاجِعَ وَدَعَا بِدَعْوَى
الْجَاهِلِيَّةِ فَهُوَ مِنْ جِثِى جَهَنَّمَ قَالُوا يَا رَسُولَ اللّٰهِ
وَإِنْ صَامَ وَصَلَّى قَالَ وَإِنْ صَلَّى وَصَامَ وَزَعَمَ أَنَّهُ
مُسْلِمٌ (احمد و حاكم)

றுள் நீங்கள் விரும்பும் எந்த ஒரு வழியையும் ஏற்றுக் கொள்ள உங்களுக்கு முழுச் சுதந்திரம் உண்டு. எங்கள் அழைப்பு, கோட்பாடு – குறிக்கோள், ஜமாஅத்தின் அமைப்பு, செயல் முறை ஆகியன யாவும் முழுக்க இஸ்லாத்தையே சார்ந்த தாகும் என்றும், குர்ஆன் – ஹதீஸின்படி எது முஸ்லிம் சமுதாயத்தின் அடிப்படைக் கடமையாயிருக்கிறதோ அதை நிறைவேற்றவே நாம் முன் வந்துள்ளோம் என்றும் உங்கள் மன சாட்சி சான்று பகர்ந்தால் எங்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள்.

ஏதாவது காரணத்தால் உங்களுக்கு எங்கள் மீது நம்பிக்கை ஏற்படவில்லையானால் வேறு ஏதாவது ஒரு ஜமாஅத், முழுக்க முழுக்க இஸ்லாமியக் குறிக்கோளுக்காக, இஸ்லாமிய முறைப்படிச் செயலாற்றுகிறது என்று உங்களுக் குத் தோன்றினால், அத்துடன் இணைந்து கொள்ளுங்கள்.

---

திருநபி (ஸல்) அவர்கள் அருளினார்கள் :

“இறைவன் எனக்கு ஐந்து விஷயங்கள் குறித்துக் கட்டளை யிட்டு இருக்கிறான். அதைக் குறித்து நான் உங்களுக்குக் கட்டளையிடுகின் றேன். கூட்டமைப்பு (ஜமாஅத்), செவியேற்றல், வழிபடுதல், நாடு துறந்து செல்லுதல் (ஹிஜ்ரத்), இறைவழியில் போராடுதல் (ஜிஹாத்) ஆகியவை (யே அந்த ஐந்து விஷயங்களாகும்) எவன் ஒருவன் ஜமாஅத்திலிருந்து ஓர் அங்குலம் விலகினாலும் – அவன் மீண்டும் ஜமாஅத்தின் பக்கம் வந்தால் ஒழிய – இஸ்லாமிய உறவைத் தன் கழுத்திலிருந்து எடுத்து வீசி எறிந்தவனாவான். எவன் அறி யாமையின் (ஜாஹிலிய்யத்தின்) பக்கம் – அதாவது பிரிவினை, பிளவு களின் பக்கம் அழைப்பு விடுக்கிறானோ அவன் நரகவாசியாவான்.”

இதைச் செவியுற்ற நபித்தோழர்கள், திருநபி அவர்களிடம் வின வினார்கள் :

“இறைத்தூதர் அவர்களே! அவன் தொழுதாலுமா நோன்பு நோற்றாலுமா?”

அதற்கு திருநபி (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள் :

“ஆம்! அவன் தொழுதாலும், நோன்பு நோற்றாலும், முஸ்லிம் என்று தாவாச் செய்தாலும் சரியே!”

எங்களுக்கு அத்தகைய ஜமாஅத் ஒன்று இருப்பதாகத் தெரிந் தால் நாங்களும் அதில் சேர்ந்து கொண்டிருப்போம். அத்த கைய தூய்மையான இஸ்லாமிய ஜமாஅத் ஒன்று ஏற்கனவே இருந்தால் அதைவிட்டு விலகி எங்களுக்காக ஒரு தனி ஜமாஅத் நிறுவும் ஆசை எங்களுக்கு இல்லை.

உங்களுக்கு எங்கள் மீதும் திருப்தி இல்லை; வேறு ஒரு ஜமாஅத் மீதும் நம்பிக்கை இல்லை என்றால் இஸ்லாம்

---

இந்த ஹதீஸிலிருந்து மூன்று அம்சங்கள் நிரூபணமாகின்றன :

1. தீனின் விவகாரங்களில் சரியான ஒழுங்குமுறை என்னவெனில். முதலில் ஒரு ஜமாஅத் இருக்க வேண்டும். அதில் எத்தகைய அமைப்பு இருக்க வேண்டுமெனில், அனைவரும் யாராவது ஒருவருடைய சொல்லைக் கேட்டு நடக்க வேண்டும். அவரை முற்றிலும் பின்பற்றி நடக்க வேண்டும். பின்னர் எவ்வாறு சந்தர்ப்பம் வாய்க்கின்றதோ அவ்வாறு அவருடைய ஆணைப்படி ஹிஜ்ரத் (நாடு துறத் தல்), ஜிஹாத் (இறைவழியில் முழு முயற்சி) செய்ய வேண்டும்.

2. ஜமாஅத்திலிருந்து பிரிந்திருத்தல் இஸ்லாத்திலிருந்தே பிரிந்து விடுவதாகும். அதன் உண்மைப் பொருள், மனிதன் இஸ்லாத்திற்கு முன் அறியாமைக் (ஜாஹிலிய்யத்) காலத்தில் அரபுகள் வாழ்ந்த வாழ்க்கையின் பக்கம் திரும்பிப் போய்க் கொண்டிருக்கிறான் என்பதேயாகும். அந்தக் கால அரபுகள் யாரும் யார் பேச்சையும் கேட்பதில்லை.

3. இஸ்லாத்தின் பெரும்பாலான கோரிக்கைகளும், அவற்றின் அடிப்படை நோக்கங்களும் ஜமாஅத்தாலும், அதன் கூட்டான முயற்சி களாலும் தான் நிறைவடைய முடியும். இதன் காரணமாகவே திருநபி (ஸல்) அவர்கள், ஜமாஅத்திலிருந்து விலகுபவனை - தொழுதாலும், நோன்பு நோற்றாலும், தான் முஸ்லிம் என்று வாதம் புரிந்தாலும் இஸ்லாத்தி லிருந்து வெளியேறுபவன் என்று பகர்ந்தார்கள். உமர் (ரலி) அவர் களின் கீழ்க்காணும் சொல், இந்த ஹதீஸுக்கு விளக்கமாய் அமைந் துள்ளது :

لا إِسْلَامَ إِلَّا بِجَمَاعَةٍ (جامع بيان العلم لابن عبد البر)

"ஜமாஅத் இல்லாமல் இஸ்லாம் இல்லை"

உங்கள் மீது விதித்துள்ள கடமையை நிறைவேற்றுவதற்காக நீங்களே முன்வந்து, இஸ்லாமிய முறைப்படி ஒரு ஜமா அத்தை அமைக்க வேண்டியது இன்றியமையாததாகும். முழு தீனை நிலைநாட்டுதலும், சொல்லாலும் செயலாலும் அது குறித்துச் சரிவரச் சான்று வழங்குதலும் அத்தகைய ஜமாஅத் தின் முக்கியக் குறிக்கோளாய் இருக்க வேண்டும். இம்மூன்று வழிகளில் எந்த வழியை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டா லும் இன்ஷா அல்லாஹ் நீங்கள் நேர்வழியில் இருப்பீர்கள்.

எங்கள் ஜமாஅத் மட்டுமே நேர்வழியில் இருக்கிறது என்றும், இதில் சேராதவர் தவறான வழியில் செல்கிறார் என்றும் நாங்கள் எப்போதும் வாதம் செய்தது இல்லை. அவ்வாறு செய்யப் போவதும் இல்லை. நாங்கள் எப்போதுமே பொது மக்களுக்கு எங்கள் ஜமாஅத்தில் சேரும்படி அழைப்பு விடுத்ததும் இல்லை. முஸ்லிம் எனும் முறையில் எங்கள் மீதும். உங்கள் மீதும் ஒரே மாதிரியாகச் சுமத்தப்படும் அந்தக் கடமையை நிறைவேற்றும் பொருட்டு உங்களுக்கு அழைப்பை விடுக்கிறோம். நீங்கள் அக்கடமையை நிறை வேற்றிக் கொண்டிருந்தால், நேர்மையின் பக்கம் இருக்கிறீர் கள். நீங்கள் எங்களுடன் சேர்ந்து பணியாற்றினாலும் சரி, இல்லையானாலும் சரியே! ஆனால் நீங்களும் முன்வராமல், முன்வருபவருக்கும் துணை போகாமல் விதவிதமான சாக்குப் போக்குகளைக் கூறிக் கொண்டு, தீனை நிலைநாட்டு வதிலும் (இகாமத்தே தீன்), மக்களிடம் அதன் சான்றை முழுமையாய்த் தெளிவுபடுத்த வேண்டிய கடமையிலிருந் தும் பின் வாங்கினால் அல்லது இறைவனின் தீன் நிலைநாட் டப்படுவதற்கு பதிலாய் வேறு ஓர் அமைப்பு நிலைநாட்டப் படுவதற்குரிய பணியில் உங்கள் சக்திகளை விரயம் செய் தாலோ இஸ்லாத்திற்குப் பதிலாக வேறு எந்த அமைப்பைப் பற்றியாவது உங்கள் சொல்லாலும் செயலாலும் உலகுக்குச் சான்று கிடைத்தாலோ நிச்சயமாக நீங்கள் எந்த வகையிலும்

நேர்வழியில் இருப்பதாய்க் கருத முடியாது. விவகாரம் உல குடனும் உலக மக்களுடனும் இருந்தால் சாக்குப் போக்கு களால் காரியம் நிறைவேறக் கூடும். ஆனால் இங்கே விவ காரம் இறைவனோடு இருக்கிறது. அவனோ நெஞ்சங்களில் உள்ள எல்லா மர்மங்களையும் அறிபவன். அவனை எந்த வகையான பித்தலாட்டத்தாலும் ஏமாற்ற முடியாது.

சந்தேகமின்றி ஒரே நோக்கத்திற்கு - ஒரே வேலையைச் செய்யப் பல்வேறு ஜமாஅத்துகள் அமைவது தவறு என்று மேற்போக்காகத் தோன்றலாம். மேலும் அவ்வாறு அமைவதினால் சமுதாயத்தில் பிளவும், குழப்பமும் பரவும் எனும் அச்சமும் இருக்கிறது. ஆனால் இஸ்லாமிய அமைப்பு சீர்குலைந்துவிட்ட பின் - அந்த அமைப்பை ஏற்று நடத்தும் பிரச்னை மட்டும் இன்றி அதை முற்றிலும் மறுமுறை தொடக்கத்திலிருந்தே உயிர்ப்பிக்கும் நிலை உண்டாகும் போது, ஒவ்வொரு முஸ்லிமும் அதில் உறுப்பினராயிருப்பது கடமை என்றும், அதில் சேராமல் இருப்பது அறியாமை என்றும், அதில் சேர்ந்தபின் விலகிப் போவது தீனில் இருந்து பிரிந்து போவதற்குச் சமம் என்றும் கருதக்கூடிய முழுச் சமூ கத்தையும் தன்னகத்தே கொண்டுள்ள ஓர் அல்-ஜமாஅத்தை தொடக்கத்திலேயே அமைப்பது சாத்தியமாகாது. தொடக்கத் தில் இந்த நோக்கத்திற்காகப் பல்வேறு இடங்களில் பல்வேறு ஜமாஅத்துகள் அமைந்து, அவை தத்தம் வழியில் பணியாற்று வதைத் தவிர வேறு வழியில்லை. தன்னலம், தீவிரவாதம் ஆகியவற்றில் இருந்து முழுமையாக விலகியிருந்தால் - தூய்மையான எண்ணத்துடன் அடிப்படை இஸ்லாமிய நோக்கத்திற்காக இஸ்லாமிய முறையில் பணியாற்றினால் சத்திய வழியில் நடக்கும் அந்த ஜமாஅத்துகள் இறுதியில் ஒன்றுபட்டு விடும். சத்திய வழியில் நடப்பவர்கள் அதிக காலம் பிரிந்திருக்க முடியாது. சத்தியம் அவர்களை ஒன்று படுத்தியே தீரும். ஏனெனில் சத்தியத்தின் இயல்பு ஒற்றுமை.

பரஸ்பர அன்பு, ஏகத்துவம், ஐக்கிய உணர்வு ஆகியவற்றிற்கு இட்டுச் செல்வதாய் இருக்கிறது. சத்தியத்தோடு ஏதாவது அசத்தியத்தின் கலப்படம் ஏற்பட்டால் அல்லது வெளியே மெய்யின் தோற்றமும் உள்ளூர அசத்தியமும் வேலை செய்து கொண்டிருந்தால், அப்போதுதான் சச்சரவுகளும், பிளவுகளும் பிறக்கின்றன.

எங்கள் ஜமாஅத்தை விரும்பி, அதில் சேருவோர்களிடம் எங்கள் கோரிக்கை என்னவென்பதையும், அவர்களுக்காக எங்களிடம் என்ன பணி இருக்கிறது என்பதையும் இப்போது நான் சுருக்கமாகக் கூறிவிடுகிறேன். இஸ்லாமிய மார்க்கம் ஒவ்வொரு முஸ்லிமிடமும் எதைக் கோரி இருக்கிறதோ அதைத் தவிர வேறு எத்தகைய கோரிக்கையையும் நாங்கள் எங்கள் உறுப்பினரிடம் சமர்ப்பிக்கவில்லை. அசல் இஸ்லாமி யக் கோரிக்கைக்கு மேல் நாங்கள் எதையும் அணுவளவும் கூட்டுவதுமில்லை, குறைப்பதுமில்லை. கூடுதலோ, குறைச் சலோ இன்றி முழு இஸ்லாத்தையும் நாங்கள் ஒவ்வொருவரிட மும் சமர்ப்பித்து விடுகிறோம். மேலும், இந்த மார்க்கத்தை நன்கு புரிந்து கொண்டு கருத்தார்ந்து ஏற்றுக் கொள்ளுங்கள்; இதன் கோரிக்கைகளை உணர்ந்து அவற்றைச் சரிவர நிறைவேற்றுங்கள்; தீனின் கட்டளைக்கும் இயல்புக்கும் மாற்றமானவற்றை எல்லாம் உங்கள் சிந்தனைகளிலிருந்தும் சொற்களிலிருந்தும் செயல்களிலிருந்தும் நீக்கி விடுங்கள்; முழு வாழ்க்கையிலும் இஸ்லாத்தின் சான்று வழங்குங்கள் என்று கூறுகிறோம். எங்களோடு சேருவதற்குக் கட்டணம் இதுவேயாகும். இவைதாம் உறுப்பினர்களுக்கான எங்கள் விதிகள் ஆகும்.

எங்கள் அமைப்பு நிர்ணயச் சட்டம் (Constitution), எங்கள் ஜமாஅத்தின் அமைப்பு முறை, எங்கள் அமைப்பின் பொருள் ஆகியன எல்லாம் வெளிப்படையாய் இருக்கின் றன. ஒவ்வொருவரும் இவற்றைப் பரிசீலனை செய்து நாங்கள்

அசல் இஸ்லாத்தில் - குர்ஆன், சுன்னத் ஆகியவற்றை அடிப் படையாகக் கொண்ட இஸ்லாத்தில் - ஏதும் கூடுதலோ குறைவோ செய்யவில்லை என்பதைப் பார்த்துக் கொள்ள லாம். எங்களுடைய எந்த விஷயமாவது குர்ஆன். ஹதீஸ் அறிவுரைகளுக்கு மாறுபட்டதாய் இருக்கிறது என்று எவ ரேனும் தக்க ஆதாரங்களுடன் நிரூபித்தால் அதை நாம் நீக்கி விட எப்போதும் தயாராயிருக்கிறோம். எவரேனும் எந்த விஷயத்தைப் பற்றியாவது, 'அது குர்ஆன், ஹதீஸ் போத னைகளில் இருக்கிறது; ஆனால் அது உங்களிடம் இல்லை' என்று எடுத்துக் காட்டினால், நாங்கள் யாதொரு தயக்கமும் இன்றி அதை ஏற்றுக் கொள்வோம். ஏனெனில் நாங்கள் முழு தீனையும் ஏதும் கூடுதல் - குறைவின்றி நிலைநாட்டவும், அதனுடைய சான்று வழங்கவுமே முன் வந்துள்ளோம். இவ் வாறு இருக்க எங்களுடைய இந்த நோக்கத்தில் நாங்கள் முனாஃபிக்குகள் (நயவஞ்சகர்கள்) என்று நிரூபணமானால், எங்களைக் காட்டிலும் பெரிய அக்கிரமக்காரர்கள் வேறு யார் இருக்க முடியும்?

நாங்கள் தீனின் சான்று வழங்குதலை முழுமையாக நிறைவேற்றுவதற்காக 'சொல்லாலும், செயலாலும் இஸ்லாத் தின் சான்று வழங்குவதுடன் - தீனின் அமைப்பை முழுக்க முழுக்க நிலைநாட்டக் கூட்டான முறையில் மும்முரமாக முயற்சி செய்யுங்கள்' என்று ஜமாஅத் அமைப்பில் சேரு வோருக்குக் கூறுகிறோம். அவர்களுக்கு நம்மிடம் உள்ள ஒரே வேலை இதுவேயாகும்.

சொல்வழிச் சான்று வழங்குதலைப் பொறுத்தவரை, தத்தம் ஆற்றல்களுக்கு ஏற்பச் சொல்லாலும், எழுத்தாலும் இஸ்லாத்தைப் பற்றி அதிகபட்சம் பொருத்தமான சான்று வழங்குவதற்குத் தயாராகும் வகையில் நாங்கள் உறுப்பினர் களுக்குப் பயிற்சி அளிக்கின்றோம். தவிர கல்வி, இலக்கியம் உட்பட வாழ்வின் அனைத்துத் துறைகளுக்குரிய இஸ்லாமிய

அறிவுரைகளின் உண்மையை உலகின் முன் தெளிவுபடுத்து வதற்காகவும். மேலும் இந்த நோக்கத்திற்காக சாத்தியமான ஊடக வலிமை அனைத்தையும் பயன்படுத்துவதற்காகவும் கட்டுப்பாடான வகையில் செயல்படும் பணியகங்களை நிறுவ முயற்சி செய்து கொண்டிருக்கிறோம்.

செயல் வழிச் சான்று வழங்குதல் தொடர்பாக நம்முடைய முயற்சி இதுவே : முதலில் ஒவ்வொரு மனிதனும் இஸ்லாத் தின் உயிருள்ள சான்றாக விளங்க வேண்டும்; பிறகு அத்த கைய சான்று வழங்குவோர் அடங்கிய ஒரு கட்டுப்பாடான சமூகம் உருவாக வேண்டும்; அச்சமூகத்திற்குள் இஸ்லாம் தன் உண்மை உருவில் செயல்படுவது காணப்பட வேண்டும்; மேலும் அச்சமூகம் தன் மும்முரமான முயற்சிகளினால். இஸ்லாத்திற்கு மாறான அமைப்பின் ஆதிக்கத்தை நீக்கி விட்டு உலகின் முன் இஸ்லாத்தினை முழுமையாகப் பிரதி பலிக்கக் கூடிய செம்மையான சீரிய அமைப்பை நிலைநாட்ட வேண்டும்.

பெரியோர்களே! எங்கள் நோக்கமும் இதுவே; எங்கள் செயல் திட்டமும் இதுவே. எந்த ஒரு முஸ்லிமுக்கும் ஆட்சே பணை எழுப்பக் கூடிய அளவு இந்தச் செயல் திட்டமும். இந்த நோக்கமும் இருக்கும் என்று நாங்கள் கனவிலும் கருதவில்லை. ஆனால் நாங்கள் இந்த வழியில் காலடி வைத்த நாள் தொட்டு ஆட்சேபணைகளின் ஓயாத பெருவெள்ளம் மடை திறந்து வந்த வண்ணம் இருக்கிறது. ஆட்சேபணைகள் அனைத்துமே பொருட்படுத்துவதற்குரியனவல்ல. இந்த ஒரே கூட்டத்தில் அவற்றை எல்லாம் அலசி ஆராய்ந்து அவற் றினை எடுத்துக் கூறுவதற்கு வாய்ப்பு இல்லை. ஆனால் இத்தருணத்தில் உங்களுடைய ஊரில் எங்களைப் பற்றி தவறான கருத்துகளைப் பரப்புவதற்காகச் செய்யப்படும் ஆட்சேபணைகளுக்குச் சில விளக்கங்களைத் தர விரும்புகிறேன்.

"உங்களுடைய இந்த ஜமாஅத், இஸ்லாத்தில் ஒரு புதிய பிரிவுக்கு அடிகோலுகிறது" என்று கூறப்படுகிறது. எவர்கள் இதைக் கூறுகிறார்களோ அவர்கள் ஒரு வேளை பிரிவுக்கான அடிப்படைக் காரணங்கள் யாவை என்பதை அறியாதவர் களாகவே இருக்கிறார்கள். மார்க்கத்தில் எவற்றின் காரண மாகப் பிரிவினை ஏற்படுகிறதோ அவை அனைத்தையும் நீங்கள் அலசி ஆராய்ந்தால் அவை நான்கு தலைப்புகளாய்ப் பிரியும். ஒன்று, அசல் மார்க்கத்தில் இல்லாத ஏதேனும் ஒன்றைக் கூட்டி அதுவே குஃப்ருக்கும் ஈமானுக்கும் இடையே மிக முக்கியமான கொள்கை வேற்றுமை என்றும், அதை ஏற்றுக் கொள்பவர்களே நேர்வழி பெற்றவர்கள் என்றும், அதை ஏற்காதவர் வழி தவறியவர் என்றும் வற்புறுத்தி அந்த விஷயத்தையே உரைகல் ஆக்கிக் கொள்வது.

இரண்டாவது, மார்க்கத்தின் ஏதாவது ஒரு குறிப்பிட்ட பிரிவை எடுத்துக் கொண்டு அதற்குக் குர்ஆனிலும், சுன்னத் திலும் இல்லாத முக்கியத்துவம் கொடுத்து அதன் அடிப்படை யில் பிரிவுகள் அமைப்பது.

மூன்றாவது, இஸ்லாமியச் சட்டத்திட்ட ஆராய்ச்சிப் பிரச்னைகளில் ஒரு விளக்கத்தை (இஜ்திஹாத் – Interpretation) அல்லது ஒரு பிரச்னை தொடர்பான மூலச் சட்டங்களி லிருந்து பெறப்பட்ட விதிகளை (Derived Rules) மிகைப்படுத்து வதும், அப்பிரச்னைகளில் தாம் ஏற்றுக் கொண்டுள்ள விளக் கத்திற்கு மாறான விளக்கத்தை ஏற்றுக் கொண்டிருப்போரை 'ஃபாஸிக்'குகள் (கெட்டவர்கள்; வழிதவறியவர்கள்) என்று கருதி அவர்களை விட்டுப் பிரிந்து, அவர்களுடன் இழிவான முறையில் நடந்து கொள்வதும் பிரிவுகள் உண்டாவதற்குக் காரணமாகும்.

நான்காவது, நபி பெருமானாருக்குப் பின் ஒரு குறிப்பிட்ட

மனிதரைப் பற்றி மிகைப்படுத்தி அவருக்கு ஒரு முதன்மை தகுதியை வழங்கி, அந்தத் தகுதியை நிராகரிப்போரை வழி கெட்டவர்கள் - காஃபிர்கள் என்று கருதுவதும், அவர்களு டைய தகுதியை ஏற்றுக் கொண்டவர்களையே முஃமின்கள் என்று கருதுவதும் அல்லது ஒரு குறிப்பிட்ட ஜமாஅத்தின் தகுதியை மிகைப்படுத்தி அதில் சேர்ந்து கொள்வாரே சத் தியத்தில் உள்ளவர்கள் என்றும், மற்ற முஸ்லிம்கள் அனை வரும் அசத்தியவாதிகள் என்றும் வாதிப்பதும் சமூகத்தில் பிளவுகள் உண்டாவதற்குக் காரணமாகும்.

மேற்கூறப்பட்ட நான்கு வகையான போக்குகளே சமூகத்தில் புதிய பிரிவினர்கள் தோன்றக் காரணங்களாய் அமையலாம்.

இப்போது நான் கேட்கிறேன் - மேற்கூறிய நான்கு காரணங்களுள் எந்தக் காரணத்தின் அடிப்படையில் நாங்கள் தவறு செய்திருக்கிறோம்? போதிய சான்றுகளால் நாங்கள் உண்மையிலேயே இன்ன காரணத்தால் தவறு செய்திருக் கிறோம் என்று யாராவது தெளிவாக எடுத்துக் காட்டினால் நாங்கள் உடனே தவ்பாச் செய்யத் தயாராய் இருக்கிறோம். எங்களை நாங்கள் சீர்திருத்திக் கொள்ள ஒரு போதும் தயங்க மாட்டோம்; ஏனெனில் நாங்கள் தீனை நிலைநாட்டவே முன் வந்துள்ளோம். பிரிவினைகளை உண்டாக்க முன் வர வில்லை. நாங்கள் இவ்வாறு எத்தகைய தவறும் செய்யாதிருக் கும் போது எங்கள் பணியால் ஒரு புதிய பிரிவு ஏற்படுவதாக அச்சம் கொள்ள இடமேது?

நாங்கள் அடிப்படை இஸ்லாத்தை - கூடுதல், குறைவு அற்ற முழு இஸ்லாத்தைக் கொண்டு எழுந்துள்ளோம். "வாருங்கள்! நாம் அனைவரும் சேர்ந்து அதை நடைமுறை யில் நிலைநாட்டுவோம். உலகுக்கு அதனுடைய சான்று வழங்குவோம்" - முஸ்லிம்களுக்கு விடுக்கும் அழைப்பு

எங்களிடம் இதுவேயாகும். எங்கள் அழைப்பில் இதைத் தவிர வேறொன்றுமில்லை.

தீனின் ஒரு குறிப்பிட்ட துறையையோ, சில துறை களையோ அடிப்படையாக்காமல் முழு தீனையே ஜமாஅத் அமைப்பின் அடிப்படையாய்த் தீர்மானித்துள்ளோம்.

இஸ்லாமியச் சட்ட ஆராய்ச்சி பிரச்னைகளிலும், மூலச் சட்டங்களிலிருந்து பெறப்பட்ட நடைமுறைகளிலும் (மஸ்லக்) ஷரீஅத் விதிகள் இடம் அளிக்கும் எல்லா மத்ஹபுகளையும், விளக்கங்களையும் நாங்கள் நேர்மையானவை என்று ஒப்புக் கொள்கிறோம்.

மேலே குறிப்பிட்ட மத்ஹபுகளிலும், விளக்கங்களிலும் யாருக்கு எதன் மேல் திருப்தி இருக்கிறதோ, அவரைப் பொறுத்தவரை அவற்றைக் கடைப்பிடிக்கும் அவருடைய உரிமையையும் நாங்கள் மதிக்கிறோம். ஏதாவதொரு குறிப்பிட்ட விளக்கத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு சமூகத்தில் பிரிவுகளை உண்டு பண்ணுவது உகந்ததல்ல என்று நாங்கள் கருதுகிறோம்.

எங்கள் ஜமாஅத்தின் விஷயத்தில் கூட நாங்கள் மிகை ஏதும் செய்யவில்லை. எங்கள் ஜமாஅத்தில்தான் மெய் முழுதும் அடங்கியிருக்கிறது என்று ஒருபோதும் கூற வில்லை. எங்களுக்குக் கடமையுணர்வு ஏற்பட்டது; ஆகை யால் நாங்கள் எழுந்துள்ளோம். உங்களுக்கு உங்கள் கட மையை நினைவூட்டுகிறோம். நீங்கள் எங்களுடன் சேர்ந்து பணிபுரிந்தாலும் சரி, நீங்களே உணர்ந்து உங்கள் கடமையை ஆற்றினாலும் சரி அல்லது யார் இந்தக் கடமையை ஆற்று கிறார்களோ அவர்களுடன் சேர்ந்து கொண்டாலும் சரி. அது உங்கள் விருப்பத்தைப் பொறுத்தது.

எங்கள் ஜமாஅத்தின் தலைமைத்துவத்தைப் (இமாரத்) பற்றிய விவகாரங்களிலும் நாங்கள் வரம்பை மீறவில்லை.

ஏதாவதொரு குறிப்பிட்ட தகுதி பற்றித் 'தாவா' செய்யப்பட்ட கராமத்துகள் (அற்புதங்கள்), இல்ஹாமத்துகள் (ஞான வெளிப் பாடுகள்) புனிதத் தன்மை கொண்ட கதைகள் ஆகியவற்றால் விளம்பரம் செய்யப்பட்ட ஒரு மகானின் மீது கொண்ட பற்று தலின் தனிப்பட்ட பலத்தின் மீது ஜமாஅத் அமைக்கப்பட்டு, அதன்பால் மக்களை அழைப்பு விடுக்கும் முறையில் எங் களின் இந்த இயக்கம் எழவில்லை. தாவாக்கள், கனவுகள், கஷ்பு கராமத்துகள், தனிப்பட்ட புனிதத் தன்மை ஆகியவை பற்றிய விவகாரங்களிலிருந்து முற்றிலும் எங்கள் இயக்கம் தொலைவிலிருக்கிறது. தனிப்பட்ட ஒருவர் பக்கமோ பலரின் பக்கமோ இங்கு அழைப்பு இல்லை. மாறாக திருக்குர்ஆனின் அடிப்படைக்கு ஒப்ப ஒவ்வொரு முஸ்லிமின் வாழ்க்கையி லும் காணப்பட வேண்டிய குறிக்கோளின் பக்கமும், எவ் விதிகளின் தொகுப்பு இஸ்லாம் எனப்படுகிறதோ அவ்விதி களின் பக்கமும் எங்கள் அழைப்பு இருக்கிறது. எவர்கள் இந்தக் குறிக்கோளுக்காக இவ்விதிகளின்படி எங்களுடன் சேர்ந்து உழைக்க விரும்புகிறார்களோ அவர்கள் சம உரிமை யுடன் எங்கள் ஜமாஅத்தின் உறுப்பினர் ஆகிறார்கள். இவ் வுறுப்பினர்கள் ஒருவரைத் தங்கள் அமீராக (தலைவராக)த் தேர்ந்தெடுக்கிறார்கள். எவருக்கும் தனிப்பட்ட உரிமை இருக்கிறது எனும் அடிப்படையில் அவரை அமீராகத் தேர்ந் தெடுப்பதில்லை. கட்டுப்பாடான முறையில் உழைப்பதற்காக ஒரு தலைவரின் தேவை இன்றியமையாதது என்பதற்காகத் தான் அவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அமீராகத் தேர்ந் தெடுக்கப்பட்டவர் அமீர் பதவியிலிருந்து விலக்கவும் படலாம். அவருக்குப் பதிலாக ஜமாஅத்தில் இருந்து தலைவர் பதவிக்கு வேறு ஒருவர் தேர்ந்தெடுக்கவும் படலாம். இந்த (அமீர்) தலைவர் இந்த ஜமாஅத்திற்கு மட்டுமே அமீர் ஆவார். இந்த அமீர் முஸ்லிம்கள் அனைவருக்கும் அமீர் அல்ல. இந்த ஜமாஅத்தில் சேருபவர்கள் மட்டுமே அவருக்

குக் கட்டுப்பட வேண்டிய இன்றியமையாமை ஏற்படுகிறது. இந்த ஜமாஅத்தின் நுகத்தடி எவர் கழுத்தில் இல்லையோ அவர் அறியாமை மிக்க மரணம் அடைவார் எனும் எத்தகைய எண்ணமும் எங்கள் சிந்தனையில் இல்லை.

அல்லாஹ்வுக்காக இப்போது என்னிடம் கூறுங்கள்! இந்த வகையில் நாங்கள் உழைக்கும் போது எங்களுடைய இந்த இயக்கத்தால் முஸ்லிம் சமுதாயத்தில் ஒரு புதிய பிரிவு எப்படித் தோன்ற முடியும்? வியப்பு என்னவெனில் எவர்கள் இத்தகைய தவறுதல்களுக்கு இலக்காகி உள்ளனரோ, எவர்களால் கோஷ்டிக் குழப்பம் விளைகிறதோ, கனவுகளைப் பற்றியும் கஷ்பு கராமத்துகளை பற்றியும் எவர்களிம் வீண் பெருமைகள் இருக்கின்றனவோ, ஏதாவதொரு குறிப்பிட்ட "ஹஜ்ரத்" அவர்கள் மீது தனிப்பட்ட பற்றுதலின் அடிப்படையில் எவர்களுடைய எல்லா செயல்களும் நடைபெறுகின்றனவோ, எவர்களிடையே ஏதாவதொருவருக்கு ஒரு குறிப்பிட்ட பதவி பற்றி 'தாவா' செய்யப்படுகிறதோ, சில்லறை விவகாரங்களுக்காக (மஸ்அலாக்களுக்காக) எவர்கள் சச்சரவுகளும் தர்க்கவாதங்களும் செய்கின்றனரோ, எவர்கள் இஸ்லாமியச் சட்ட ஆராய்ச்சிகளில் ஏற்படும் விளக்கங்களின் அடிப்படையில் பிரிவுகள் உண்டு பண்ணுகிறார்களோ அவர்களே எங்களைக் குறை கூறுவதில் முன்னால் நிற்கிறார்கள்.

யாரும் குற்றமாக எடுத்துக்கொள்ளவில்லையாயின் நான் தெளிவாகச் சொல்லுவேன். இவ்வாறு குறை கூறுபவர்கள் எங்களுடன் பிணக்குக் கொண்டு தங்கள் வாயால் எதைக் கூறுகிறார்களோ அதுவல்ல எங்கள் உண்மைக் குற்றம்; மாறாக, தீன் வகுத்த அடிப்படைப் பணியின் பக்கம் நாம் அழைப்பு விடுத்ததே எங்கள் குற்றமாகும். அந்தப் பணியோ இவர்களுக்குப் பிடிக்காததாக இருக்கிறது. மேலும் அந்தப் பணிக்காக நாங்கள் தேர்ந்தெடுத்துள்ள நேர்மையான வழிமுறைகளில் இருந்து இவர்களுடைய நடைமுறையில்

இருக்கும் குற்றங்களும் குறைகளும் தாமாக வெளிப்பட்டு விடுகின்றன என்பதற்காகவே அவர்கள் எங்கள் மீது கோபப்படுகிறார்கள்.

"நீங்கள் இந்தப் பணியைச் செய்வதாயிருந்தால் அவசியம் செய்யலாம். குறிப்பிட்ட ஒரு தனிப் பெயருடன் நீங்கள் ஜமாஅத்தை ஏன் நிறுவினீர்கள்?" என்றும், "இதனால் முஸ்லிம்களிடையே பிளவு ஏற்படுகிறது" என்றும் எங்களிடம் கூறப்படுகிறது. உண்மையில் இது ஒரு வியப்பைத் தரும் ஆட்சேபணையேயாகும். நான் வியந்து போகிறேன். தீனுக்கு மாற்றமான நாத்திக அரசியலுக்காக - இஸ்லாத்துக்கு மாற்றமான கல்விக்காக - மார்க்கத்தின் பெயரால் கோஷ்டிகள் உண்டாக்குவதற்காக - வெறும் உலகியல் நோக்கங்களுக்காக - மேல்நாட்டு ஜனநாயக அல்லது பாசிஸ முறைகளின்படி முஸ்லிம்களின் அஞ்சுமன்களும் (கழகங்களும்), ஜமாஅத்களும் தனிப்பட்ட பெயருடன் தொடங்கப்பட்டால் அவை மன அமைதியோடு சகித்துக் கொள்ளப்படுகின்றன. ஆனால் தீனின் முக்கியமான அடிப்படை வேலைக்காக, முழுக்க முழுக்க தீனின் விதிகளின் படி ஒரு ஜமாஅத் நிறுவப்பட்டால் திடீரென்று, 'முஸ்லிம்களிடையே பிளவு' என்னும் ஆபத்துத் தோன்றிவிட்டதாக அவர்களுக்குப் படுகிறது. அத்தகைய ஒரு ஜமாஅத் தோற்றுவிக்கப்படுவதைத்தான் அவர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இதனால் உண்மையில், ஆட்சேபிப்போருக்கு ஒரு ஜமாஅத் அமைவதில் வெறுப்பில்லை - மாறாக தீனின் அடிப்படையில் பணிபுரிய ஒரு ஜமாஅத் அமைவதில்தான் அவர்களுக்கு பொறுப்பு உள்ளது என்ற ஐயம் ஏற்படுகிறது. உண்மையில் ஜமாஅத் ஆசையின் காரணமாக அமைக்கப்படவில்லை; கடமை உணர்வின் காரணமாகவே அமைக்கப்பட்டுள்ளது என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். இந்த ஜமாஅத் உருவாவதற்கு முன் "முஸ்லிம்களே! நீங்கள் ஏன் இந்த வழிகளில் உங்கள் சக்திகளை

யும், முயற்சிகளையும் விரயம் செய்து கொண்டு இருக்கிறீர்கள்? நீங்கள் செய்ய வேண்டிய அசல் வேலை இதுவேயாகும். இதன்மீது உங்கள் முயற்சிகள் அனைத்தையும் ஈடுபடுத்துங்கள்" என்று பல ஆண்டுகளாக நான் எடுத்துக் கூறி வந்திருக்கிறேன்.

இந்த அழைப்பை எல்லா முஸ்லிம்களும் ஏற்றுக் கொண்டிருந்தால் - முஸ்லிம்களுக்குள் ஒரு தனி ஜமாஅத் ஏற்படுவதற்கு பதிலாக, எல்லா முஸ்லிம்களையும் கொண்ட ஒரே "ஜமாஅத்" உருவாகி இருக்கும். குறைந்தபட்சம் அது இந்திய அளவிலாவது பெரிய "அல்ஜமாஅத்"தாய் இருந்திருக்கும். அது நடைபெறவில்லை. (அத்தகைய ஜமாஅத் அமைந்து இருந்தால்) அது இருக்கும் போது வேறு ஒரு ஜமாஅத் அமைப்பது ஹராமாயிருக்கும். குறைந்தபட்சம் முஸ்லிம்களின் பல்வேறு ஜமாஅத்களிலே ஏதாவதொன்று இதை ஏற்றுக் கொண்டிருந்தாலும் நாங்கள் சம்மதித்து இருப்போம். அதிலேயே நாங்கள் மகிழ்ச்சியோடு சேர்ந்து கொண்டிருப்போம்.

நாங்கள் கத்திக் கத்திச் சோர்ந்து போனபின் - யாரும் எங்கள் பேச்சைக் கேட்க முன்வராதபின், இந்தப் பணி மெய்யானது - இன்றியமையாதது என்று உணர்ந்து கொண்ட நாங்களாவது ஒன்றுபட வேண்டும்; அதற்காகக் கூட்டாக முயற்சி செய்ய வேண்டும் என்னும் கட்டாய நிலை ஏற்பட்டதாலேயே நாங்கள் இந்த ஜமாஅத்தை நிறுவுவதற்கான முடிவு எடுத்தோம். நாங்கள் இதைக் கூட செய்யாவிட்டால் வேறு எதைத் தான் செய்வது? இந்தப் பணி கடமையானது அல்ல என்று கருதினால் உங்கள் ஆட்சேபணைக்கு ஆதாரம் காண்பியுங்கள்! மறுப்பு இல்லையென்றால் பல்வேறுபட்ட உங்கள் அஞ்சுமன்களும், ஜமாஅத்களும் இதே கடமையை நிறை வேற்றுகின்றனவா என்பதைக் கூறுங்கள்! "இல்லை" என் றால், தங்கள் கடமையை உணர்ந்து

யார் அதை நிறைவேற்று வதற்காக எழுகிறார்களோ அவர் களைக் குற்றவாளிகள் என்று உங்களால் எப்படிக் கூற முடியும்?

“நீங்கள் உங்கள் ஜமாஅத்தின் தலைவருக்கு : ‘அமீர்’ என்னும் பெயரை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்? முழு அரசியல் – ராணுவ அதிகாரம் உள்ளவரல்லவா அமீராக அல்லது இமா மாக இருக்க முடியும்?” என்று எங்களிடம் கூறப்படுகிறது. இமாமத் என்பது கல்வியின் இமாமத்தாகவோ, தொழுகை யின் இமாமத்தாகவோ, ஜிஹாதின் (அறப்போரின்) இமாமத் தாகவோ இருக்க முடியும். இம்மூன்றைத் தவிர வேறுவித இமாமத்தே இல்லை என்றும் விளக்கப்படுகிறது. இதற்கு ஆதாரமாகச் சில ஹதீஸ்களும் எடுத்துக் காட்டப்படுகின்றன. எவர்கள் ஆட்சேபணைகளைக் கிளப்புகிறார்களோ அவர் கள் அரசியல் ஆதிக்கத்துடன் கூடிய இஸ்லாமிய அமைப்பு ஏற்பட்டிருந்தபோது – ராணுவ அதிகாரமுள்ள இமாமத் ஏற்பட்டிருந்தபோது பொருந்திய மார்க்கச் சட்டங்களையும், பிக்ஹு சட்டங்களையும் ஹதீஸ்களையுமே அறிந்து வைத்து இருக்கிறார்கள். ஆனால் ராணுவ அதிகாரம் பறிக்கப்பட்ட பின் – முஸ்லிம்களின் ஜமாஅத் அதிகாரத்தில் இருந்து நீக்கப் பட்டபின் – இஸ்லாமிய ஜமாஅத்தின் அமைப்பு சீர்குலைந்து போனபின் உள்ள நிலைமைக்கு எத்தகைய கட்டளைகள் இருக்கின்றன என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. நான் அவர்களைக் கேட்கிறேன் : இத்தகைய நிலைமையில் முஸ்லிம்கள் தனித்தனியாகப் பிரிந்து ஓரிடத்தில் அமர்ந்து “இறைவா! ராணுவ பலம் கொண்ட இமாம் ஒருவரை அனுப்பி வை!” என்று துஆ செய்து கொண்டிருக்க வேண் டுமா அல்லது இத்தகைய இமாமத்தை ஏற்படுத்தக் கூட்டாக முயற்சி செய்ய வேண்டுமா? கூட்டாக முயற்சி செய்ய வேண்டியதுதான் என்று அவர்கள் கூறுவார்களாயின் – ஒரு ஜமாஅத் நிறுவப்படாமல் கூட்டாக முயற்சி செய்ய முடியுமா

என்பதை அவர்கள் அருள்கூர்ந்து எங்களுக்கு விளக்க வேண்டும்.

ஜமாஅத் அமைப்பதைத் தவிர வேறு வழியில்லையென் பதை அவர்கள் ஒப்புக் கொண்டால் ஒரு வழிகாட்டி, ஒரு நிர்வாகத் தலைவர், ஒரு கட்டளையிடும் அதிகாரி இல்லாமல் ஏதாவது ஜமாஅத் நடைபெற முடியுமா? அவர்கள் அதன் தேவையையும் ஒப்புக் கொள்வார்களாயின் இஸ்லாமிய நோக்கத்திற்காக அமைக்கப்படும் இஸ்லாமிய ஜமாஅத்தின் நிர்வாகத் தலைவருக்கு இஸ்லாமிய அகராதியில் என்ன பெயர் இருக்கிறது என்பதை அவர்களே தெரிவிக்கட்டும்! எந்தப் பெயரை அவர்கள் கூறினாலும் – நாங்கள் அதை ஏற்றுக் கொள்வோம். ஆனால், ஒரு நிபந்தனை : இஸ்லாமிய மரபுக்கு ஏற்ற பெயராக அது இருக்க வேண்டும்?

"ராணுவ அதிகாரம் கிடைத்தபின் பின்பற்ற வேண்டிய அறிவுரைகள்தாம் இஸ்லாத்தில் இருக்கின்றன. அது இல்லாத நிலையில் ராணுவ பலத்தை எப்படிப் பெற முடியும்? இதைப்பற்றி ஓர் அறிவுரையும் இஸ்லாத்தில் இல்லை; இவ்வேலையை எவர் செய்ய வேண்டியிருக்கிறதோ அவர் அதை இஸ்லாத்திற்குப் புறம்பான முறையில் – இஸ்லாமிய மரபுக்கு மாற்றமான பெயர்களை வைத்துக் கொண்டே செய்ய வேண்டும்" என்று வேண்டுமானால் அவர்கள் தெளிவாகக் கூறிவிடட்டும்! இவர்களின் நோக்கம் இது இல்லையாயின் பிரஸிடெண்ட், லீடர், காயித் போன்ற பெயர்களைப் பயன்படுத்தினால் அவர்களுக்கு அவை சம்மதமாயிருக்கின் றன போலும்! அமீர் எனும் இஸ்லாமியப் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் ஏன் நெருப்பை மிதித்தவர்கள் போல் ஆகிவிடுகிறார்கள்! இது எங்களுக்குப் புரியாத புதிரா யிருக்கிறது.

பொதுவாக மக்களுக்கு இந்தப் பிரச்னையைப் புரிந்து

கொள்வதில் கஷ்டம் ஏற்படுவதற்குக் காரணம், நபி (ஸல்) அவர்கள் காலத்தில் அமீர், இமாம் எனும் பெயர்கள் பயன் படுத்தப்பட்ட போது இஸ்லாமிய ஆட்சி நிர்மாணிக்கப்பட் டிருந்தது. இஸ்லாமிய ஆட்சி இல்லாதிருந்த போது நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதர் எனும் தகுதியில் தான் தீனை நிலைநாட்டுவதற்கான முயற்சிகளுக்குத் தலைமை தாங்கிக் கொண்டிருந்தார்கள். ஆகையால் அமீர், இமாம் எனும் பெயர் களை பயன்படுத்தும் வாய்ப்பு இல்லாமல் இருந்தது. முழு இஸ்லாமிய அமைப்பின் மீதும் பார்வை செலுத்தினால், இந்த மார்க்கம் முஸ்லிம்களின் கூட்டான ஒவ்வொரு வேலைக்காக வும் ஒரு கட்டுப்பாட்டை விரும்புகிறது என்பது தெளிவாகிறது. கட்டுப்பாடு இருக்க வேண்டுமென்பதற்காக, எந்த வேலையும் ஜமாஅத் அமைத்துச் செய்யப்பட வேண்டுமெனும் யோசனையை இஸ்லாம் தெரிவிக்கிறது. அந்த ஜமாஅத்தில் செவியுறுதலும் கீழ்ப்படிதலும் இருக்க வேண்டும். ஒருவர் அதன் அமீராக இருக்க வேண்டும். தொழுதாலும் ஜமாஅத்துடன் தொழ வேண்டும். அந்த ஜமாஅத்துக்கும் ஓர் இமாம் இருத்தல் அவசியம். ஹஜ் செய்தாலும் கட்டுப்பாடான முறையில் செய்ய வேண்டும். அதற்கு ஹஜ்ஜின் அமீர் ஒருவர் இருத்தல் அவசியம். சுருங்கச் சொன்னால் மூன்று பேர் பயணத்திற்காகப் புறப்பட் டாலும் - அப்போதும் அவர்கள் கட்டுப்பாட்டுடன் பயணம் செய்ய வேண்டும். தங்களுக்குள் ஒரு தோழரை அமீராகக் கொள்ள வேண்டும் என்றும் கீழ்வரும் ஹதீஸில் அறிவிக் கப்பட்டுள்ளது.

إِذَا خَرَجَ ثَلَاثَةٌ فِي سَفَرٍ فَلْيُؤَمِّرُوا
أَحَدَهُمْ " (ابوداؤد - ابوسعيد خدريؓ)

"மூன்று நபர்கள் பயணம் புறப்பட்டால், அவர்கள்

தங்களுள் ஒருவரை அமீராக (தலைவராக) கொள்ளட்டும்.”

முஸ்னத் அஹ்மத் எனும் ஹதீஸ் நூலில் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டிருக் கிறது :

لَا يَحِلُّ لِثَلَاثَةٍ يَكُوْنُوْنَ بِفَلَاةٍ مِّنَ الْأَرْضِ
إِلَّا أَمَّرُوْا عَلَيْهِمْ أَحَدَهُمْ ـ" (منتقى)

“மூன்று பேர் ஒரு காட்டில் இருந்தால், அவர்கள் தங் களுக்குள் ஒருவரை அமீராக நியமித்துக் கொள்ளவில்லை யாயின் அச்செயல் ஹலால் (அனுமதிக்கப்பட்டது) ஆகாது.”

இதனால் பயணத்தில் மட்டுமின்றி எல்லாச் சந்தர்ப் பங்களிலும் முஸ்லிம்கள் கட்டுப்பாடான வாழ்வு நடத்த வேண்டுமென்பதும் – அவர்களுடைய எந்தக் கூட்டான வேலையும் ஜமாஅத், தலைமை ஆகியன இன்றி நடைபெறு தல் கூடாது என்பதும் தெரிகிறது.

இஸ்லாமிய ஷரீஅத்தின் உயிரே இதில்தான் இருக்கிறது. இதை உமர் (ரலி) அவர்கள் கீழ்வரும் சொற்களில் விளக்கி யிருக்கிறார்கள் :

لا إِسْلَامَ إِلا بِجَمَاعَةٍ وَلا جَمَاعَةَ إِلا بِإِمَارَةٍ وَلا
إِمَارَةَ إِلاَّ بِطَاعَةٍ (جامع بيان العلم لابن عبد البر)

“ஜமாஅத் இல்லாமல் இஸ்லாம் இல்லை. தலைமை இல்லாமல் ஜமாஅத் இல்லை. கீழ்ப்படிதல் இல்லாமல் தலைமையில்லை.”

ஆகையால் தீனை நிலைநாட்டுதலும் பொதுமக்களி

டையே அதன் சான்று வழங்குதலும் ஆகிய முயற்சிகளுக் காக எந்த ஜமாஅத் அமைக்கப்படுகிறதோ அதன் நிர்வாகத் தலைவருக்கு அமீர் அல்லது இமாம் எனும் சொற்களின் பயன்பாடு முற்றிலும் சரியானதே என்பது எங்களுடைய முடிவாகும். இமாம் எனும் சொல்லுடன் வேறு பல குறிப்பான பொருளும் இணைந்துவிட்டதால், நாங்கள் குழப்பத்தைத் தவிர்ப்பதற்காக இச்சொல்லை விடுத்து அமீர் எனும் சொல்லைப் பயன்படுத்தி இருக்கிறோம்.

"எவர் இந்த வகையில் ஜமாஅத்தின் நிர்வாகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறாரோ அவருக்கு ஜகாத் வசூல் செய்யும் எந்த உரிமையும் இல்லை. ஏனெனில் இஸ்லாமிய ஆட்சியில் உள்ள அமீரே ஜகாத்தை வசூல் செய்யக் கூடும்" எனும் வியப்பான ஆட்சேபணைகளையும் கேள்விப்படுகிறோம். இந்த ஆட்சேபணையாளருக்கு ஜகாத் வசூல் செய்யும் விஷயத்தில் எங்கள் வழிமுறையே தெரிய வில்லை போல் இருக்கிறது. எங்கள் பைத்துல்மாலில் ஜகாத் தைச் செலுத்துங்கள் என்று நாங்கள் பொதுவாக முஸ்லிம் களிடம் கோரிக்கை விடுக்கவில்லை. எந்த முஸ்லிம் ஜகாத்தை எங்களிடம் கொடுக்கவில்லையோ அவருடைய ஜகாத் நிறைவேறாது என்று ஒருபோதும் கூறுவதில்லை. நாங் கள் எங்கள் ஜமாஅத் உறுப்பினர்களிடம் மட்டுமே தங்கள் ஜகாத்தை எங்கள் பைத்துல்மாலில் செலுத்துங்கள் என்று கோருகிறோம். இதனால் எங்களுடைய பரந்த நோக்கம் என்னவெனில், இஸ்லாமிய ஷரீஅத்தின் நோக்கப்படிக் கூட் டான முறையில் ஜகாத்தை வசூலிக்கும் - விநியோகிக்கும் வழக்கம் ஏற்பட வேண்டும் என்பதேயாகும். நாங்கள் இவ் வாறு செய்வதற்கு ஷரீஅத்தில் ஏதாவது தடையிருக்கிறதா? ஷரீஅத்தின் எந்தக் கட்டளைக்கு இச்செயல்முறை முரணாக இருக்கிறது என்று யாராவது எங்களுக்கு எடுத்துக் காட்டட் டும்! தொழுகையைத் தனித்தனியே வீடுகளில் நிறைவேற்

றாதீர்கள். ஜமாஅத்துடன் தொழுங்கள் என்று மக்களுக்கு கூற எங்களுக்கு உரிமை உண்டென்றால், ஜகாத்தைத் தனிப்பட்ட முறையில் நிறைவேற்றுவதற்குப் பதிலாக கூட்டான முறையில் நிறைவேற்றுங்கள் என்று கூற ஏன் உரிமை இல்லை? சந்தா வசூலித்தால் அது ஆகுமானது; நுழைவுக்கட்டணமும், உறுப்பினர் கட்டணமும் வசூல் செய்தால் நியாயமானது. ஆனால் அல்லாஹ் - ரஸூல் விதித்த கடமையை நிறைவேற்றுவதற்கு அழைப்பு விடுத்தால் அது ஆகாதது என்று சொல்வது எவ்வளவு வியப்பிற்குரியது!

இதைக் காட்டிலும் மிக விநோதமான ஆட்சேபணை, 'நீங்கள் பைத்துல்மால் ஏன் ஏற்படுத்தினீர்கள்?' என்பதாகும். இத்தகைய ஆட்சேபணைகளைக் கேள்விப்படுவதால் - அவ்வாறு ஆட்சேபிப்பவர்களுக்கு இஸ்லாமிய மரபுப் பெயர்கள் மீதே ஏதோ வெறுப்பு ஏற்பட்டு விட்டதோ என்று நினைக்கத் தோன்றுகிறது. ஒவ்வொரு ஜமாஅத்தும், அஞ்சுமனும் கூட்டான வேலைகளில் செலவு செய்வதற்கென்று ஒரு நிதியை அவசியம் வைத்திருக்கிறது.

எங்கள் ஜமாஅத்திலும் ஒரு நிதி இருக்கிறது. அதை நாங்கள் 'பைத்துல்மால்' என்று கூறுகிறோம். ஏனெனில் இதுவே பொருத்தமான இஸ்லாமியப் பெயராகும். நாங்கள் இதன் பெயரை நிதி (கஜானா) என்று வைத்திருந்தால் அவர்களுக்கு ஆட்சேபணை ஏற்பட்டிருக்காது. இதற்கு நாங்கள் கருவூலம் (Treasury) என்று பெயரிட்டிருந்தால் அப்போதும் அவர்கள் மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள். ஆனால் இதற்காக நாங்கள் ஓர் இஸ்லாமியப் பெயரைப் பயன்படுத்தியதை அவர்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

இவ்வித ஆட்சேபணைகளிலே பெரும்பாலானவை மிகவும் பலவீனமானவை. அவற்றுக்கு விடைகள் கொடுத்து

இங்கு வருகை தந்துள்ளோரின் காலத்தை வீணாக்க நான் ஒருபோதும் விரும்பமாட்டேன்.

ஆனால், எவர்கள் தங்கள் கடமையை நிறைவேற்றவில் லையோ, பிறரை நிறைவேற்றவும் விடவில்லையோ அவர்கள் எத்தகைய சாக்குபோக்குகளையும், ஆட்சேபணை களையும் ஐயங்களையும் துருவித் துருவிக் கண்டுபிடிக் கிறார்கள் என்பதையும் - இறைவழியில் செல்ல அவர்கள் எப்படித் தயங்குகிறார்கள்; பிறரையும் செல்லவிடாது தடுக்கிறார்கள் என்பதையும் எடுத்துக்காட்டவே சிலவற்றை எடுத்துக்காட்டுகளுடன் கூறினேன்.

எங்கள் வழிமுறை சச்சரவிடுவது, தர்க்கவாதம் செய்வதன்று. எங்கள் பேச்சை நேர்மையாக யாராவது புரிந்து கொள்ள விரும்பினால், எப்போதும் அவர்களுக்கு நாங்கள் விளக்குவதற்குத் தயாராயிருக்கிறோம். எங்கள் தவற்றை யாராவது ஆதாரத்தோடு விளக்க விரும்பினால் நாங்கள் விளங்கிக் கொள்ளவும் தயாராய் இருக்கிறோம். ஆனால் வீண் குழப்பத்தில் விழுவதிலும், விழவைப்பதிலும் ஆர்வம் கொண்டோரிடம் நாங்கள் கவனம் செலுத்தவே விரும்ப வில்லை. அவர்கள் விரும்பும் வரை அப்பணியை அவர்கள் செய்து கொண்டிருக்கட்டும்!

